# பல்சுவை நாவல்




# மனக்கோயில்

## பாலகுமாரன்



# ஆசிரியர் பக்கம்

தோழமைக்கு!

வணக்கம்!

சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப் பழக்கம். எனவே, எதுவும் பழகிவிடும். பழக, நாம் அனுபவிக்கும் சுகமும், துக்கமும் இயல்பாகும். அப்படித்தான், பல்சுவை நாவலோடு, பல்சுவை நாவல் ஸ்பெஷல் இதழையும் வாரி அணைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உச்சிமுகர்ந்து இறுக்கிக் கொண்டதற்கும், ஆதரவுக்கரம் நீட்டி வாங்கிக் கொண்டதற்கும் வாழ்த்துக்கள்.

நாம் நடந்து செல்லும் பாதை நெடுகிலும், நெருஞ்சிகள் நிறைந்திருந்தாலும், ஆங்காங்கே பூக்களும் தென்படும். நெருஞ்சியை நினைந்து, பூக்களின் மலர்ச்சியையும், வாசத்தையும், அதன் புத்துணர்ச்சியையும் உணரமறந்தால், வாழ்க்கை சோகமாய்த்தான் இருக்கும். எனவே, உணர்ந்து, என் புதிய இதழை, வாங்கிச் சென்ற தோழமைகளுக்கு இன்னுமொரு வணக்கம்.

வாசகர்களை மதித்தல் மிக உன்னதமானது என்பதை அனுபவபூர்வமாக காட்டிவிட்டீர்கள். உங்களின் உணர்தலைக்கண்டு வியந்தேன்.

எழுத்துச் சித்தரின் 'தனிமை தவத்திற்கும்.' ஸ்பெஷல் இதழான, தென்கிழக்கு மின்னலுக்கும் தான் எவ்வளவு கடிதங்கள். எவ்வளவு படைப்புகள். இத்துணை எழுத்தார்வம் நிறைந்துள்ள சமூகம், நிச்சயம் சாதிக்கும் என்கிற வெளிச்சம், பேரொளியாய் பரவுவதை உணரமுடிகிறது. எழுத எழுத நம்மிடம் கற்றுக்கொள்ளும் ஆர்வம் மூளுகிறது. தீயாய் காய்ந்து வாட்டுகிறது. நினைக்கவே முடியாத கோணத்தில், தெறிக்கும் வாசகர்களின் கவிதைகளை வாசிப்பதே, ஒரு அலாதியான அனுபவம்தான்.

இந்தத் தோழமையின் கைகுலுக்கலும். நெருக்கமும், நம்மை வேறொரு உலகிற்கு இட்டுச் செல்லும்.

உருகி உருகி எழுத்துச்சித்தரைப்பற்றி எழுதியிருக்கும் உங்கள் கடிதங்களை வாசிக்கும் போது, நெஞ்சம் நெகிழ்கிறது. எவ்வளவு பெரிய சிகரத்திற்கு அருகில் நிற்கிறோம் என்பது புரிகிறது. அந்த மகானை மிக உற்சாகமாய், வெகு அற்புதமாய் எழுத வைப்பது, உங்களின் கடிதங்கள்தான்... அந்தக் காவேரி ஊற்று குளிர்நீராய், குற்றால அருவியாய், நம் மனமெங்கும் நனைத்து, சாந்தப்படுத்தட்டும். ஒழுக்கம் சொல்லட்டும். பாதை காட்டட்டும். குருவின் துணையோடு, பிறவிப் பெருங்கடல் கடப்போம், நேசமாய்.

அந்த திசை நோக்கி, தொழுவதைத் தவிர நமக்கு வேறு கதியேதுமில்லை.

அப்புறம்...,

**அடுத்த இதழ் தீபாவளி சிறப்பிதழாக மலர்கிறது.** எழுத்துச்சித்தரின் மிக நீண்ட நாவல்

மற்றும் வாசகர் பக்கங்கள் என்று மிகப்பொலிவுடன் வெளிவருகிறது.

அதேபோல், பல்சுவை நாவல் ஸ்பெஷல் இதழும், தீபாவளி மலராக வெளிவர துடித்துக் கொண்டிருக்கிறது. இதில், 'மர்மதேசம்' இந்திரா சௌந்தர்ராஜன் எழுதும், 'வைரம்... வைரம்... வைரம்...' என்ற மர்ம நாவல், நம் எழுத்துச்சித்தர் எழுதும், 'ஞாபகச்சிமிழ்' என்ற உன்னதமான கட்டுரைத் தொகுப்புகளும் இடம்பெற்று மிக அதிக பக்கங்களுடன் இரண்டு நாவல்களாக அற்புதமாக வெளிவரும்.

இரண்டு இதழ்களையும் முன்புபோலவே, வாங்கி, ஆதரவுக்கரம் நீட்டுங்கள்.

வாசிக்கும் பழக்கம் மிக முக்கியமானது என்பதை மறந்துவிடக்கூடாது. வாசிப்பே ஒருவகை மெடிட்டேஷன்தான். தியானப்பயிற்சிக்கு முதலில் மனம் ஊன்றிப் படித்தல் நலம்.

இந்தமுறை நாம் மனம் திறந்து பேசியதால், என் சமூகப் பார்வையை விசாலமாக்க பக்கங்கள் போதவில்லை. அடுத்த தீபாவளி மலரில், என் உரத்த சிந்தனைகளுடன் கை குலுக்குவேன்.

மற்றபடி,

உங்களின் மனங்களைத் திறக்கும், உங்கள் கடிதங்களை எதிர்நோக்கியே காத்திருக்கிறேன். நாம் நினைப்பதை எழுதி அனுப்புங்கள். மனசு லேசாகும். கோபம் தணியும். சாந்தம் பெருகும். மதித்தல் தழைக்கும். மனம் பக்குவப்படும். எழுதுவதும் ஒரு வகையில் தியானம்தான்.

மீண்டும் சந்திப்போம்.

தோழமையுடன்,

பொன்.சந்திரசேகர்

இனிய ஸ்நேகிதத்திற்கு,

வணக்கம். வாழிய நலம்.

மறுபடியும் ஒரு பண்டிகைக்காலம் வந்துவிட்டது. இந்தமுறை மழையோடு வந்திருக்கிறது. ஆகஸ்ட் மாதம், மழை, தமிழ்நாட்டில் அபூர்வம். ஆனால், தமிழ்நாடெங்கும் தென்மேற்கு பருவக்காற்றால், நல்ல மழை ஏற்பட்டு, விவசாயிகளுக்கு உதவி செய்திருக்கிறது. இறைக்கு நன்றி சொல்வோம்.

கடந்த சில மாதங்களாக பல்சுவை நாவலுக்கு நீங்கள் அளித்து வரும் ஆதரவு மிகுந்த சந்தோஷம் தருகிறது. கடினமான விஷயங்களை எழுதினாலும், ஆவலாக வாங்குவதற்கு நீங்கள் தயாராக இருக்கிறீர்கள் என்பதை அறிய, சந்தோஷமாக இருக்கிறது. தொடர்ந்து, ஒருவர் நிச்சயம் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற விஷயங்களை நாவல் மூலமாக நான் சொல்லப் போகிறேன். புராணங்களையும் வரலாற்று விஷயங்களையும் தொடர்ந்து எழுதப் போகிறேன்.

கடிதம் எழுத பலபேருக்கு கைவருவதில்லை. நான், கடிதம் எழுதினால் பதில்கடிதம் எழுத வேண்டுமென்று, பலர் நினைக்கிறார்கள். உங்கள் கடிதம் மூலம்தான், உங்கள் ரசனை அனுபவத்தைப்பற்றி, நான் தெரிந்து கொள்ள முடியும். அப்போதுதான், தொடர்ந்து எழுதுவதுபற்றி தெளிவாக திட்டமிட முடியும். அதிகம் கூட வேண்டாம். ஒரு இன்லேண்ட்

பாலகுமாரன்

[redacted]

லெட்டரில், உங்களுக்கு இந்தக்கதை எப்படிப் பிடித் திருக்கிறது, எப்படி உணர்ந்தீர்கள் என்பதை எழுதுங் கள். அழகான தமிழில்தான் எழுத வேண்டுமென்று அவசியமில்லை. சாதாரணமாக நண்பர்களோடு பேசுவது போல எழுதுங்கள். உங்கள் கடிதம் எனக்கு மிகமுக்கியம்.

இதற்கு அடுத்த இதழ் தீபாவளி இதழ். மிகப் பெரிய நாவலொன்றை மனதுக்குள் தயார் செய்து வைத்திருக்கிறேன். சரித்திரமும் இறையருளும் கலந்த நாவல் அது. தமிழில் தனித்துவம் பெற்ற ஒரு மகானின் வாழ்க்கை சரித்திரம் அது. யார் என்ன என்பதை நாவலில் படித்து தெரிந்து கொள்ளுங்கள்.

நாவல் தவிர வேறு சில விஷயங்களும் எழுத வேண்டும் என்று ஆசிரியர் பொன். சந்திரசேகர் கட்டளையிட்டிருக்கிறார். மற்ற பக்கங்களை சுவை யுடன் கொண்டு வர, இப்போதே, உழைக்கத் துவங்கி யிருக்கிறார்.

இந்த பண்டிகைக்கால பல்சுவை நாவல் இதழ், மிக அற்புதமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. முன் கூட்டியே உங்கள் பிரதிக்கு சொல்லிவைத்து விடுங்கள்.

வேறென்ன... அரசியல் சூழல் கவலையளிக் கிறது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு விதமான நாடகம், வயிறை கலங்கவைக்கிறது. தனிமனிதர் களுக்கும் ஆத்திரங்கள் அதிகம். எளிதில் சம் பாதிக்க, எல்லாவிதமான அதர்ம முயற்சிகளும் செய் கிறார்கள். மக்களைப்பார்க்க பரிதாபமாக இருக்

# பேசுகிறேன்

[redacted]

கிறது. அமைதியாக இருப்பது பற்றி, யாருமே. சொல்லித்தரவில்லை என்பது வேதனையாக இருக்கிறது. நமக்கு நாமே திருத்திக்கொள்ள வேண்டும். இல்லையெனில் வாழ்க்கை அபத்தமாகப்போகும்.

பல்சுவை நாவல் வாசகர்கள் அமைதியாகவும், ஆனந்தமாகவும், தெளிவாகவும் வாழ, அந்த மகா சக்தியை மனமுருக பிரார்த்தனை செய்கிறேன். என் சத்குருநாதர் யோகி ராம்சுரத்குமார் அவர்களை வேண்டிக் கொண்டு உங்கள் அனைவர் வாழ்வும் பூத்துக்குலுங்க இறைஞ்சுகிறேன்.

மறுபடி சந்திப்போம்.

என்றென்றும் அன்புடன்
பாலகுமாரன்



முக்கிய அறிவிப்பு

பல்சுவை நாவல் வாசகர் பேரவை உறுப்பினர்களே, உங்களில் சிலர் புதிய விலாசத்தில் அல்லது வேறொரு ஊரில் இடம் மாறியிருக்கலாம். அவர்கள் உடனடியாக தங்களின் புதிய முகவரியை ஒரு அஞ்சலட்டையில் எழுதி தொடர்பு கொள்ளவும்.

— ஆசிரியர்

# கிடை மடை

□ பல்சுவை நாவலை தற்செயலாகத்தான் படிக்க நேர்ந்தது. Realy Super. கண்டிப்பாக ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்க வேண்டிய, படிக்க வேண்டிய புத்தகம். மிக அசத்த லான கதை. அம்சமான கவிதைகள். வாசகர் விஷயங்கள். கேள்வி பதில்கள். இன்னும் இன்னும் ஏராள மான பகுதிகள். சொல்லவே புல்லரிக்கிறது. ஒரு தடவை படித்த அத்தனைப் பகுதியும், மீண்டும் தேடிப் படிக்கச் செய்யும் அற்புதமான நாவல் இது.

***பி.எம்.ராமன், பால்பாளையம்.***

□ பல்சுவை நாவல் பரிசாக, திரு.பாலகுமாரன் அவர்களின் கையெழுத்திடப் பட்ட புத்தகமான ''ஒரு காதல் நிவந்தம்'' கிடைத்த மறுகணம், இந்த நன்றிக் கடிதத்தை எழுதுகிறேன். இந்தப் பரிசு கிடைத்ததில் தாங்கள் எழுதியிருப்பதைப் போலவே, எனக்கு பெரு மகிழ்ச்சிதான். பல்சுவை நாவல் இதழுக்கு மீண்டும் மீண்டும் என் நன்றிகள்.

***ரமாரகுநாத், திருச்சி.***

□ பல்சுவை நாவல் படிதது முடித்த பிறகு மகாபாரத காவியத்தில் இப்படி ஒரு கதை ஒளிந்திருக்கிறதா என்று மிக ஆச்சர்யமாகி விட்டது. ஐம்புலன்களை பாண்டவர்களாக்கி, பாண்டவர்களை தாங்கும் பாஞ்சாலியை உயர்த்தி வைத்து, புதிய நடையில் செல்கிறது பாலாவின் சிந்தனை!

***வை.சண்முகவேல், திருச்சி.***

□ ஆண்களுக்கு எல்லாப் பெண்களும் தாய்தான். எந்த குலத்தினள் ஆனாலும், என்ன வேலை செய்தாலும், என்ன வயதாக இருந்தாலும், தாயே, என்றும், மனைவி என்பவளும் தாயைப் போன்றவளே. என்

பதையும் உணர்கிறேன். இந்தக் கருத்தை உணர்ந்தால் சரிகாவின் இறப்பு நடந்திருக்காது. நாட்டில் நடக்கும் பல கற்பழிப்புகள் மிகவும் குறைந்திருக்கும். 'தனிமை தவம்' பண்பற்றவர்களையும் திருத்தும் என்பது என் நம்பிக்கை.

***து.கார்த்திகேயன், மணப்பாறை.***

☐ தெரியாததைத் 'தெரியாது' என அலட்டலில்லாமல் ஒப்புக் கொள்ளும் போதே அறிதல் அல்லது கற்றல் ஆரம்பமாகிவிடுகிறது என்பது நல்ல கருத்து. பஞ்சபாண்டவர்களுக்கு அப்படி ஒப்புக் கொள்ளும் பணிவு இருந்தமையால், துரியோதனன் தண்டனையாய் அளித்த, ஒளிந்திருக்க வேண்டிய காலத்தையும், கற்கும் காலமாக அவர்களால் மாற்றிக் கொள்ள முடிந்துள்ளது. 'புகழ் பெற்றோருக்குத் தம்மை எடை போட்டுக் கொள்ளத் தனிமை அவசியம்' - என்பதால் அந்தத் தனிமையைத் தந்த துரியோதனனுக்கு உண்மையில் அவர்கள் நன்றி சொல்கிறார்கள். எதிலும் இருண்ட பகுதியைப் பார்க்காமல் ஒளிமிக்க பகுதியை மட்டும் பார்க்க, பஞ்ச பாண்டவர் மூலம் நாமும் கற்கலாம்.

***ரமாரகுநாத், திருச்சி.***

☐ 'முதிர் கன்னி' என்ற சொற்றொடர் எப்படி பாலகுமாரனால் வழக்கிற்கு வந்ததோ அதுபோல 'ஒளிந்துறைதல்' என்ற அருமையான ஆழ்ந்த சொற்றொடரை வழங்கியுள்ளார். தனிமை தவம் மூலம் தலைமறைவு வாழ்க்கை என்பதில் என்னவோ ஒருகுறை - கறை இருப்பதாக தோன்றும். ஒளிந்துறைதல் என்பது எவ்வளவு பெரிய ஆற்றல் - கடினம் என்பதையும் தன்னகத்தே ஒளிந்துறையும் இறையை உணர்தலுக்கான வழிமுறைகளையும் இயல்பாக - இதிகாசப் பூச்சுமட்டுமே இல்லாமல் உணர்த்துகிறார்.

***காமாட்சி சத்தியநாராயணன், வேலூர்.***

☐இதிகாச, புராணக்கதைகள் தங்களின் கையால் செதுக்கப்பட்டு வரும் போது, ஒரு அழகான, தத்ரூபமான சிலையாய் வெளிவருகிறது. ஆழ்கடலாய் கிளம்பும் அக்கதையிலிருந்து நாங்கள் எடுக்கின்ற, எடுத்துக் கொள்கின்ற நல் முத்துக்கள் ஏராளம், ஏராளம். தங்களை குருநாதராய்க் கொண்டு பின் தொடரும் பல ஏகலைவர்களில் நானும் ஒருவன் என்பதில் பெரு மகிழ்ச்சியும், மன நிறைவும் அடைகிறேன்.

***நாராயண ஹரிகிருஷ்ணன், திருச்சி.***

☐ சான்றோருக்கு புகழ் கிறக்கம் வருவதேயில்லை வர விடுவதில்லை. என்று நீங்கள் கூற, நான் மேலும் படித்து கொண்டே சென்றேன். ''பிருகன்னளை போதும் புகழ்ச்சி நீ போகலாம்.'' சைரந்தரி பேச்சை அறுத்தாள். அர்ஜுனன் வாய்விட்டுச் சிரித்தான். அர்ஜுனன் வாய்விட்டுச் சிரிக்கும் வரை நான் புகழின் உச்சிக்கே போய்விட்டேன் அர்ஜுனன் சிரித்தான் என்று நீங்கள் சொன்ன பிறகே உச்சியில் இருந்து கீழே விழுந்தேன். நான் செய்த தவறு தெரிந்தது. உண்மையிலேயே உங்கள் நாவலை படிக்கையில்தான் நான் என்னை, என்தவறை அறிய முடிகிறது. இப்படி எத்தனையோ முறை காயப்பட்டிருக்கிறேன் எனக்குள் நானே. எனக்குள்ளே. என்னைக் காட்டிய நீங்கள் எனக்கு சித்தர். எழுத்துச் சித்தர்.

***ஏ.கணேஷ்,***
***ஸ்ரீ வைகுண்டம்.***

☐ கவிதையோட்டமான ஆரம்பம். படிப்பவர் - நெஞ்சில் சில்லென்று பன்னீர் தூவும் வரிகள். பெண்களின் பால்நிலைகளை வர்ணித்தால் மட்டுமே... மாதநாவல் வாசகனுக்குப் பிடிக்கும் என்கிற ஜென்மாந்திர தண்டனையிலிருந்து விடுதலை கிடைத்து... வாழ்வியல் சம்பந்தப்பட்ட அனைத்தையும் நுணுக்கி அறியும் சுதந்திரம் கிடைத்த பரவசம்...! என்னுயிர்த்தோழி, என் கண்மணித் தாமரை, சிம்மாசனம் எனத் தொடர்ந்து, இப்போது ''தனிமைதவம்!'' எங்களை - அத்வைதம் அடையச் செய்யும் தங்கள் எழுத்துக்களை, படிக்கவும், முக்கியமாய் புரிந்து கொள்ளவும்... என்ன பேறு செய்தோமோ... இறைக்கு நன்றி!

***பாலமுருகன்,***
***அதிராமபட்டினம்.***

☐ மகாபாரதத்தை பாடங்களில் படித்திருந்தாலும், இத்தனை தெளிவாக மனதோடு புரிந்ததில்லை. அதட்டி, உருட்டி சோறு ஊட்டும் தாயிற்கும், நிலவைக் காட்டி அன்போடு சோறு ஊட்டும் தாயிற்கும் வித்தியாசமுண்டு. இதில் முன்னது பள்ளிப்பாடம். பின்னது உங்களின் தனிமை தவம் தந்த பாடம். எங்களின் ஞானப்பசி தீரவில்லை. ஓரளவு திருப்தியுற்றாலும் பசி அடங்கவில்லை. தொடர்ந்து தவம் இருப்போம். உங்கள் எழுத்திற்காக, பசி என்னும் வரத்தோடு.

***நிஷா,***
***கடையநல்லூர்.***

☐ இந்த உலகில் கீசகனைப் போன்ற எண்ணம் உள்ள ஆண்கள் குறைந்தது மூன்றில் ஒரு பாகம் இருக்கின்றார்கள். அவர்கள் எல்லாம் உங்கள் கதைகளைப் படித்து,

ஒரு மணிநேரம் யோசனை செய்தால் நல்லவர்களாக மாறலாம்! இந்த மகாபாரத கதையில் பாண்டவர்கள் எத்தனையோ கஷ்ட நஷ்டங்கள் அனுபவித்தார்கள். அதுபோல இந்திய மக்கள் கஷ்டம் வரும்போது. கலங்காமல் கஷ்டத்தை எதிர்த்து போரடணும் என்ற கருத்துகளும் என் மனதிற்கு இனிமையாக இருந்தது. நானும் ராணுவத்தில் பணிபுரிகின்றேன். எத்தனையோ கஷ்டங்கள் வருகின்றன. உங்கள் கதைகளை எல்லாம் படிக்கும் போது எந்த கஷ்டத்தையும் எதிர்த்து போராடணும் என்ற எண்ணம் என்னுள் வந்துள்ளன. நீங்கள் இதைப் போன்ற நாவலை உலகமக்களுக்கு எழுதணும் உங்கள் கதைகளைப் படித்தாவது சிலர் நல்லவர்களாக மாறணும்.

***எம்.பாலகிருஷ்ணன், 17th MECH INF, இந்தியா.***

☐ நான் சிறிய வயதில் பாரதக் கூத்து பார்த்து இருக்கிறேன். ஆனால் பஞ்சபாண்டவர்களின் வனவாசத்தைப் பற்றி தாங்கள் கூறிய விதம் அருமை. தங்கள் பாணியே தனி என இதன் மூலம் நிருபித்து விட்டீர்கள்.

***எஸ்.வினாயகமூர்த்தி, செஞ்சிகோட்டை.***

☐ ஆசிரியர் பக்கத்தில் கெடுவான் கேடு நினைப்பான்', சொன்ன விளக்கம் அருமை. ஆன்மீகத் தேரோட்டம் சீக்கிரம் வலம் வர விரும்புகிறேன். ஆன்மீகத் தேரை உலகம் முழுவதும் பாலகுமாரன் அவர்களுடன் வடம் பிடிக்க ஆவலுடன் உள்ளோம். உணர்தல் மிக முக்கிய குணம். உணர்ந்து உலகைப் புரட்டுவோம் என்று உற்சாகபடுத்தியதற்கு நன்றி.

பக்கமின்மையால் பல பகுதிகள் இடம் பெறவில்லை என்று சொல்கிறீர்களே, பக்கத்தை கூட்டி வாசகர்களை மகிழ்விக்கலாமே? கவிதை மழையில் நனைய வைக்கும் வாசகர்கள் அனைவருக்கும் எனது இனிய பாராட்டுக்கள். அதிலும் கனகராஜன் கவிதை என் மனதைத் தொட்டது. நாவல் படிப்பது தேன்சுவை என்றால் பாலகுமாரன் பதில்கள் படிப்பது கரும்பின் சுவை போன்றது.

***வை.சுப்ரமணியன், பெத்தநாயக்கன் பாளையம்.***

☐ பாலாவின் எழுத்தும், ஆன்மீகத் தெளிவும் தமிழ் சமூகத்திற்கும், இளைஞர்கட்கும் சென்று சேரும் வண்ணம், தொடர்ந்து அவர்களை, தங்கள் இதழில் எழுதச் செய்துவரும் தங்களுக்கு, நாம் என்றும் கடமைப்பட்டுள்ளோம்.

எழுத்துச் சித்தரே ஆசிரியராய் அமைய ஒரு ஆன்மீக இதழ் வெளிவருகிறதெனில்... கண்கள் விரியக் காத்திருக்கிறோம். விரைவில் இவ்விதழ் பொலிவுடன் வெளிவர இறையருளை இறைஞ்சுகின்றோம்!

***தயாநிதி,***
***கோவை.***

☐ தனிமை தவம் படித்தேன் -

சூரிய வெளிச்சத்தை
எதனோடு ஒப்பிட.

வானத்தின் நீலத்தை
எதனோடு ஒப்பிட.

குயிலின் ராகத்தை
எதனோடு ஒப்பிட.

பாலகுமாரன் எழுத்தை
எதனோடு ஒப்பிட..

***கோவிந்தராசு,***
***குடியாத்தம்.***

☐ பல்சுவை நாவல் படித்தேன். இனிய பூந்தோட்டம் வழியே நீண்ட தொரு பயணம் போய் வந்தது போல் இனிமையாக இருந்தது நாவல். இறையுணர்வு பற்றி பாலா அவர்கள் மிக மேன்மையாக, மீண்டும், மீண்டும் எழுத, எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

***பி.சாவித்திரி,***
***மாஞ்சேரி***

☐ அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பொறாமை. வயிற்றெரிச்சல் இவற்றை ஆசிரியர் பொன்.ச. தலையங்கத்தில் சுட்டிக் காட்டிய விதம் முற்றிலும் உண்மையே!

***எம்.அசோக்ராஜா,***
***அரவக்குறிச்சிப்பட்டி.***

☐ தருமராசர் தன் தம்பிகளுக்கும், திரௌபதைக்கும் கூறும் அறிவுரைகள் எல்லாருக்குமானது. கர்வம், அகங்காரத்தின் மொத்தமுடிவு, அழிவுதான் என்பதை கீசகனின் முடிவின் வாயிலாகத் தெளிவுபடுத்தியிருக்கிறார் சகாதேவன். உத்திர குமாரனுக்கு கூறும் அறிவுரைகள் மூலம் பசுக்களின் புனிதம் பற்றியும் அகத்திகீரை கொடுப்பது யாகத்திற்கு சமமானது என்பதையும் கூறியுள்ளார். இது நிச்சயம் பலபேருக்கு உதவியாகும் என்பது மட்டும் உண்மை.

***என்.சுரேஷ் ஆனந்தன்,***
***சென்னை.***

☐ அன்பு ஒழுகும் ஆசிரியர் பக்கம், வாசகர்களை குணக்குன்றுகளாக்கும் அகல் விளக்கு எனும் ஆன்மீக விளக்கு, நேராக அமர்ந்து பேசுவதைப்போன்ற வாசகர்களின் அத்தனைக் கடிதங்களும், 'ஒரு பெரிய பல்சுவை விருந்தாக அமைந்து, வழக்கத்தைவிட ஒரு படி மேலாக பல்சுவை நாவலின் தரத்தை அதிகப்படுத்தியிருந்தன.

***சோழபாரதி,***
***சென்னை-18.***



# இளையராஜா

— வைரமுத்து

இளையராஜனே!

உன்னோடு பேசத் தொடங்குவதற்கு முன்னால் இதை அச்சுக் கோப்பவர்களுக்கு ஒரு வார்த்தை.

அச்சுக் கோப்பவர்களே! அடியிற் காணும் வரிகளை அடிக்கோடிடுக.

**இசை ஞானியே!**

**என்னோடு சேர்ந்துதான் வெற்றிபெற முடியும் என்ற நிலையில் நீயும் இல்லை.**

**உன்னோடு சேர்ந்துதான் வெற்றிபெற முடியும் என்ற நிலையில் நானும் இல்லை.**

எனவே இந்த என் எழுத்துக்கு - பிறழ உணர்ந்து கொள்ளப்படும் பிழை நேராதிருக்க - இந்தப் பீடிகை போதுமானது என்று நம்புகிறேன்.

இப்போது வருகிறேன்.

இளையராஜனே!



# பதை

**ம**ண்ணில் மட்டும் கிடைப்பதல்ல புதையல், பழைய புத்தகங்களைப் படிக்கும் போதும் கிடைப்பதுண்டு. இதில் வாசகர்களும் கலந்து கொள்ளலாம். தாங்கள் புதையல் என்று கருதும் அந்தப் பக்கத்தை அப்படியே கிழித்து, அல்லது ஜெராக்ஸ் எடுத்து, இணைத்து அனுப்ப வேண்டும். அதில் பிரசுரமான இதழின் பெயரும் மாதமும், வருடமும் கட்டாயம் குறிப்பிட்டிருக்க வேண்டும்.

---

*என் இலக்கிய வாழ்க்கையின் இரண்டாம் பாகத்தைத் தொடங்கிவைத்தவனே! தூக்கி நிறுத்தியவனே!*

*உன்னை நினைக்கும் போதெல்லாம் என் மனசின் ஈரமான பக்கங்களே படபடக்கின்றன.*

*கொட்டையை எறிந்துவிட்டு, பேரீச்சம்பழத்தை மட்டுமே சுவைக்கும் குழந்தையைப் போல என் இதயத்தில் உன்னைப் பற்றிய இனிப்பான நினைவுகளுக்கு மட்டுமே இடம் தந்திருக்கிறேன்.*

*மனைவியின் பிரிவுக்குப் பிறகு அவள் புடவையைத் தலைக்கு வைத்துப் படுத்திருக்கும் காதலுள்ள கணவனைப் போல அவ்வப்போது உன் நினைவுகளோடு நான் நித்திரை கொள்கிறேன்.*

*நான் மனிதன்.*

*இறக்கும் வரை ஈரமானவன் ஆனாலும் இறுக்கமானவன்.*

*சூரியகாந்தியும் நானே! தொட்டாற்சுருங்கியும் நானே!*



எனவேதான் அவ்வப்போது உணர்வுகளின் முடிச்சவிழ்த்து உதறிவிடுகிறேன்.

**தி**ரை உலகில் நான் அதிக நேரம் செலவிட்டது உன்னிடம்தான்.

மனசில் மிச்சமில்லாமல் பேசிச் சிரித்தது உன்னோடுதான்.

பெண்களைத் தவிர என் கனவில் வரும் ஒரே ஆண் நீதான்.

நமக்குள் விளைந்த பேதம் ஏதோ நகம் கிழித்த கோடுதான்.

ஆனால் நான் கண்ணிலும் மெல்லியவன். நகத்தின் கிழிப்பை என் விழிப்பை தாங்காது.

பரணில் கிடக்கும் ஆர்மோனியம் எடுத்து, தூசு தட்டி, வாசிப்பது போல் உன் தூசுகளைத் துடைத்துவிட்டு உன்னை நான் ஆர்மோனியமாகவே நேசிக்கிறேன்.

**நீ**ளமான வருடங்களின் நீண்ட இடைவெளிக்குப் பிறகு ராஜாஜி ஹாலில் எம்.ஜி.ஆர். இரங்கல் கூட்டத்தில் இருவரும் சந்தித்துக் கொள்கிறோம்.

என்னை நீ குறுகுறுவென்று பார்க்கிறாய்.

உன்னை நானும் பார்க்கிறேன்.

தூண்டிலில் சிக்கிய மீனாய்த் தொண்டையில் ஏதோ தவிக்கிறது.

வார்த்தை துடிக்கிறது

வைராக்கியம் தடுக்கிறது

வந்துவிட்டேன்.

**அ**ன்று... இரவெல்லாம் உன் ஞாபகக் கொசுக்கள் என்னைத் தூங்கவிடவில்லை.

உன்னோடு சேர்ந்தபின்தான் எத்தனை எத்தனை மாற்றங்கள் என்னில்.

ஒரே வருஷத்தில் சூரியனை என் பக்கம் திருப்பிச் சுள்ளென்று அடிக்க வைத்தாய்.

இந்த விதைக்குள் இருந்த விருட்சத்தை வெளியே கொண்டு வந்தாய்.

என் பெயரைக் காற்றுக்குச் சொல்லிக் கொடுத்தாய்.

நீதான்..... அந்த நீதான் ஒரு நாள் என்க்கு வக்கீல்

நோட்டீசும் அனுப்பினாய்..

ஒரு கணம் திகைத்தேன்.

வெள்ளைத் தாமரையாய் இருந்த மனசு கார்பன் தாளாய்க் கறுத்தது.

பிறகு நிதானமாய்ச் சிந்தித்தேன்.

நீ எனக்குச் செய்த நன்மைகள் மட்டுமே என் நினைவுக்கு வந்தன.

சினிமாக் கம்பெனிகளின் முகவரிகளே தெரியாத அந்த வெள்ளை நாட்களில் என்னை வீட்டுக்கு வந்து அழைத்துப் போவாயே! அதை நினைத்தேன்.

நான் கார் வாங்குகிற காலம் வரை உன் காரில் என்னை என் வீட்டில் இறக்கிவிட்டுப் போவாயே! அதை நினைத்தேன்.

உன் வீட்டிலிருந்து உனக்காகக் காய்ச்சி அனுப்பப்படும் ஒரு கோப்பைப் பாலில் எனக்குப் பாதி கொடுக்காமல் எப்போதும் நீ அருந்தியதில்லையே! அதை நினைத்தேன்.

'ஆயிரம் தாமரை மொட்டுக்களே' பாடல் பதிவாகி முடிந்ததும் என்னைப் பரவசத்தோடு தழுவிக் கொண்டு என் கன்னங்களை வருடிக் கொண்டு, அப்படியே புகைப்படக்காரரைப் படமெடுக்கச் சொன்னாயே! அதை நினைத்தேன்.

அந்த நினைவுகளின் இதமான உஷ்ணத்தில் உன் வக்கீல் நோட்டீஸ் எரிந்து போனது.

எனக்கு எதிராக உன் பெயரில் ஓர் அறிக்கை வருகிறது.

இருக்காதே என்று நினைக்கிறேன்.

பிறகு - நண்பர்களுக்குச் சொல்லி நகலைப் கைப்பற்றுகிறேன்.

உன் அறிக்கைதான்.

ஒரு பெண் வெட்கப்படுவது மாதிரி இருக்கும் உனது கையெழுத்தேதான்.

படித்தேன்; சிரித்தேன்; கிழித்தேன்; வேறொரு கோணத்தில் நினைத்தேன்.

உன் எழுத்தில் இந்த உஷ்ணம் இருந்தால் உன் இருதய அடுப்பில் எத்தனை விறகு எரிந்திருக்கும்!

உன் உள்ள உலை எத்தனை முறை கொதித்திருக்கும்!

காரணமே இல்லையே.

இது இருதயத்திற்கு ஆகாதே.

எனக்கே தியானம் சொல்லித் தந்தவனாயிற்றே! இப்படி இருக்கக் கூடாதே.

என் இதயப் பறவை இறந்த காலத்தில் பறந்தது.

ஒரு நாள் உனது வீட்டில் உன் தியான நேரத்தில் 'நீங்களும் தியானம் செய்யுங்கள்' என்றென்னை அழைக்கிறாய்.

நான் சிரிக்கிறேன்.

என் ஒவ்வொரு கவிதையும் தவம்தான். ஒவ்வொரு நல்ல பாடலும் தியானம்தான்.

பிறகு உன் வேண்டுகோளுக்காய் விளையாட்டாய் உன்னோடு உட்காருகிறனே்.

"கண்களை மூடி ஒரு சாமி பெயரைச் சொல்லி மனசை ஒருமுகப்படுத்துங்கள்" என்கிறாய்.

"ஏன் சாமி பெயர்? பூவின் பெயரைச் சொன்னாலும் மனசு ஒருமுகம் ஆகுமா ஆகாதா?" என்கிறேன்.

இருவரும் தியானிக்கிறோம்.

ஏ.சி.யின் ஓசையைத் தவிர எல்லா ஓசையும் நின்று போகிறது.

கொஞ்ச நேரத்தில் அந்த ஓசையும் தொலைந்து போகிறது.

என்ன இது! எனக்கு என்ன நேருகிறது?

நான் எங்கோ கீழே.....கீழே... தரையே இருக்க முடியாத ஒரு பாதாளத்தில் பயணிக்கிறேன்.

என் வசத்தில் நானில்லை.

என் குதிரைகளின் லகான்கள் என் கையை விட்டுப் போய்விட்டன.

திடீரென்று ஒரு வெளிச்சம். என்னைச் சுற்றிக் கோடிச் சூரியப் பிரகாசம்.

அதைத் தாள முடியாமல் தவிக்கிறது உடம்பு.

எனக்கு மூச்சுத் திணறுகிறது.

கண்களைத் திறக்க முடியவில்லை.

முதன் முதலாய் உன் பெயர் சொல்லிக் கத்துகிறேன்.

என்னை உசுப்பி என் நிலைக்குக் கொண்டு வந்த நீ என் அனுபவம் சொல்ல ஆச்சரியம் கொள்கிறாய்.

அன்றிலிருந்து என்னை நீ 'சாமி' என்று அழைக்க ஆரம்பிக்கிறாய்.

எனக்குச் சிரிப்பு வந்தது.

உன்னை நானும் அப்படியே அழைக்க ஆரம்பித்தேன்.

உன் அறிக்கையைப் படித்ததும் எனக்குள் எழுந்த சந்தோஷம் இதுதான்.

"நான் தியானத்தைத் தொடர்வதற்காய்க் கடவுளைக் கழித்துவிட்டேன். நீ கடவுளைத் தொடர்வதற்காய் தியானத்தைக் கழித்து விட்டாயா?"

நண்பர் கமல்ஹாசன் என்னை அழைத்து அவரது புதிய சரித்திரப் படத்துக்கு வசனம் எழுதச் சொல்கிறார் சந்தோஷத்தோடு 'சரி' என்கிறேன்.

ஆனால் லோக்சபையின் தீர்மானத்தை ராஜ்யசபா அடித்து விடுவது மாதிரி நீ தடுத்து விடுகிறாய்.

இப்படியெல்லாம் அடிக்கடி நான் சிரித்துக் கொள்ளச் சந்தர்ப்பம் தருகிறாய்.

நான் எப்போதும் நேசிக்கும் இனியவனே!

இப்போது சொல்கிறேன்.

உனது பட்டறையில் எனக்கெதிராய் அம்புகள் மட்டுமே தயாரிக்கப்படுகின்றன.

ஆனால் எனது யுத்தத் தொழிற்சாலையில் கவசங்கள் மட்டுமே தயாரிக்க வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறேன்.

ஏனென்றால், என்னை எதிரியாக நீ நினைக்கிறாயே தவிர உன்னை எதிரியாக நான் நினைக்கவில்லை.

உன்னை நான் பிரிந்தோ என்னை நீ பிரிந்தோ அல்லது பிரிக்கப்பட்டோ நாம் தனித்து நின்ற சமயம் உனக்கு வேண்டாதவர்கள் சிலர் என் வீட்டுக்கு வந்தார்கள்.

உனக்கெதிரான அவர்களின் கூட்டணிக்கு என்னைத் தலைமையேற்கச் சொன்னார்கள்.

நான் கொதித்தேன்.

"அவன் சிங்கம். நானும் சிங்கம். சிங்கத்துக்கும் சிங்கத்திற்குமே யுத்தம். நரிகளின் கூட்டணியோடு சிங்கங்கள் போர்க்களம் புகுவதில்லை" என்று சீறிச் சினந்து போய்வாருங்கள்' என்றேன்.

மறுகணம் யோசித்து, வார்த்தைகளில் பாதியை வாபஸ் வாங்கிக் கொண்டு, 'போங்கள்' என்றேன்.

நீ வீழ்ந்தாலும் - வீழ்த்தப்பட்டாலும் எனக்குச் சம்மதமில்லை.

இவ்வளவு உயரத்தில் ஏறியிருக்கும் ஒரு தமிழன் உருண்டு விடக்கூடாது.

நீ வீழ்வாய்'என்பதும் வீண் பேச்சு.

உன் தகுதிகள் உயர்ந்தவை.

உன் இசையெல்லாம் ஏதோ ஈஸ்வரன் கொடுத்த வரம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாய்.

தப்பு.

திரிவேணி சங்கமம் - உன் திறமை.

அந்தப் பண்ணைப்புரத்து ஓடைக்கரைகளில் - தும்பிகள் பறக்கும் சோளக்காடுகளில் சேறு மணக்கும் வயல்களில் - காக்காய்க்குஞ்சு விளையாடிய பூவரச மரத்துநிழல்களில் நீ கேட்டுக் கேட்டு வளர்ந்த கிராமத்து கீதங்கள் உன் முதல் சக்தி.

பாவலரோடு பயணப்பட்டு, மாட்டு வண்டி போகாத ஊர்களுக்கும் பாட்டு வண்டி ஓட்டிச் சென்று மக்கள் கலைகளின் மர்மங்கள் அறிந்ததும், கர்நாடக சங்கீதத்தில் சூட்சுமங்கள் தெரிந்ததும் உன் இரண்டாம் சக்தி.

சென்னைக்கு வந்து, சித்திரை மாதத்து வெயிலில்கூடச் செருப்பில்லாமல் நடந்து சென்று தன்ராஜ் ஆசானிடம் நீ தாகத்தோடு கற்றுக் கொண்ட மேற்கத்திய சங்கீதம் உன் மூன்றாவது சக்தி.

இந்த மூன்றையும் சேர்த்து நீ செய்த மொத்தத் தவம் அதுவே உனது தொழில் பலம்.

சாதாரணமானதில்லை உன் சங்கீத வசியம்.

உன் எத்தனையோ மெட்டுகள் எழுதும்போதே என்னை அழ வைத்திருக்கின்றன.

"சங்கீத ஜாதி முல்லை" என் காகிதத்தை நனைத்திருக்கிறது.

"ஈரமான ரோஜாவே" என் கண்ணில் திரை கட்டியிருக்கிறது.

"மனிதா மனிதா" என் நரம்பைத் தெறிக்கும் அளவுக்கு விண்றக்க வைத்திருக்கிறது.

'பனிவிழும் மலர்வனம் எழுதும்போது ஏதோ ஒரு தேவதை என் மீது பூச்சொரிந்து கொண்டேயிருந்திருக்கிறது.

'இளையநிலா' எழுதும்போது நான் அத்வைதமே அடைந்திருக்கிறேன்.

எனக்குள் இருந்த அனுபவங்களையெல்லாம் தோண்டியெடுத்துத் துடைத்திருக்கிறது உன் மெட்டு.

கடற்கரையில், டிரஸ்ட்புரத்தின் ராத்திரிச் சாலைகளில், பூங்காக்களில், ரயில்களில், விமானங்களில், கொடைக்கானல் மலையின் அடிவாரத்தில், சிகரத்தில், கழிப்பறைகளில், குளிப்பறைகளில் உன் மெட்டுகளோடு நான் குடித்தனம் செய்திருக்கிறேன்.

உன் மெட்டுக்கு எழுதும் போதெல்லாம் இருதயம் வழுக்கி வழுக்கிப் பாதம் நோக்கிப் போவதான ஒரு பரவசத்தை அடைந்திருக்கிறேன்.

சிந்துபைரவியிலும், முதல் மரியாதையிலும் எனக்கு இரண்டு பக்கமும் இரண்டு சிறகுகள் முளைத்ததாய் உணர்ந்திருக்கிறேன்.

எப்படியெல்லாமோ என்னை வியக்க வைத்திருக்கிறாய்.

ஒவ்வொரு பாடலுக்கும் இதுதான் 'பாவம்' என்று எப்படித்தான் தேர்ந்தெடுக்கிறாயோ?

இந்திய அளவில் நான் சந்தித்த எல்லா

முன் அட்டைப்படம்:
'WIDE ANGLE' ரவிசங்கர்



இசையமைப்பாளர்களும் சொல்லிவிட்டார்கள் நீ சிறந்தவன் என்று.

உன் சிறப்புகளைச் சிந்திக்கிறேன்.

தமிழ்நாட்டுக் காற்று கடந்த பதினைந்து வருடங்களாய் உன் குத்தகையிலேயே இருக்கிறது.

நண்பர் ரஜினிகாந்தை விட நீதான் நிறையச் சம்பாதிக்கிறாய்.

கட்டுப்பாடு என்னும் கவசமிருக்கிறது உனக்கு.

திரையுலகம் என்னும் திறந்த பேருந்தில் கரம் சிரம் புறம் நீட்டாதவன் நீ.

திரையுலகை நீ துறக்கலாமே தவிர, திரையுலகம் உன்னைத் துறக்க முடியாது.

நீயும் நானும் சேர வேண்டுமாம்.

சில தூய இதயங்கள் சொல்லுகின்றன.

உனக்கு ஞாபகமிருக்கிறதா?

'ஈரமான ரோஜாவே' எழுதி முடித்துவிட்டு ஆழியாறு அணையின் மீது நடந்து கொண்டிருந்தோம். திடீரென்று என்னை நீ துரத்தினாய். நான் ஓடினேன். நீ துரத்திக் கொண்டேயிருந்தாய். நான் ஓடிக் கொண்டேயிருந்தேன்.

மழை வந்தது.

நின்று விட்டேன்.

என்னை நீ பிடித்து விட்டாய்.

அப்போது சேர்ந்து விட்டோம்.

ஏனென்றால் இருவரும் ஒரே திசையில் ஓடிக் கொண்டிருந்தோம்.

இப்போது முடியுமா?

இருவரும் வேறு வேறு திசையில் அல்லவா ஓடிக் கொண்டிருக்கிறோம்?

---

**நன்றி**

**இந்தக் குளத்தில் கல்லெறிந்தவர்கள்**

புதையலைத் தேடி எடுத்தவர் - அன்பரசு,

3, அரிதாஸ் முதல் தெரு, கொளத்தூர், சென்னை - 99.




எப்போதும்
உனக்கானதற்காகவே
ஆலோசிக்கிறாய்
உன் முகம் கோண
எதிர்ப்பவர் முகத்தினில்
நீ விழிப்பதில்லை

ஆனால்
உன்னைச் சார்ந்துள்ள
எதையும் மதிக்கிறாய்.

அந்த நாலு பேருக்காக
அன்பு செலுத்தவும்
தவறுவதில்லை.

எனக்கானதற்கான
எதற்கும்
நீயே
தியாகங்களைச் செய்வதாய்
புலம்பித் திரிவதில்
வெட்கப்படுவதுமில்லை.

ஆனால்
எப்போதும்
உனக்கான தற்காகவே
நீ கவலைப்பட்டிருப்பாய்.
என்பதை
துருத்திக் கொண்டு தெரியும்
உன் ரத்தம் தோய்ந்த
கோரைப் பற்களைக்
காணும்
ஒவ்வொரு வேளையும்
நானும்
நாணுவதில்லை.

இன்னும்
எனக்கானதற்கான
என்று
உனக்கானவைகளை
பூர்த்தி செய்து கொள்வதற்கு
எவ்வளவோ
— வால்மீகியன்

## அத்தியாயம் - மூன்று

உண்மையை உண்மையாகவே சொல்ல முடியாது. உண்மையை உவமையாகத்தான் சொல்ல முடியும். ஏனெனில் சத்தியத்தை விளக்குவது கடினமானது.

இந்த பிரபஞ்ச சூட்சுமம், ஜனன மரண வாழ்க்கை, இயற்கையின் வித்தியாசங்கள், ஏற்றத் தாழ்வுகள், எல்லாவற்றையும் நேரடியாக புரிந்து கொள்ள முடியாது. கதையாகச் சொன்னால் ஓரளவு புரியும். சொல்லும்போது புரியாவிட்டாலும், வேறு எப்போதேனும் புரியும்.

அதனால்தான் இந்து மதம் உவமைகள் நிறைந்தது. பாற்கடல் என்பதற்கு வேறொரு அர்த்தம். அது ஒரு உவமானம். அது எப்போது தயிராகும் என்று கேட்பவன் நிர்மூடன் அல்லது அதிகப்பிரசங்கி.

புவியின் உருளலில் ஒரு பிசகு ஏற்பட்டது. மக்கள் வாழ்க்கையில் பிழைகள் மலிந்தன. இறைவன் என்கிற ஆதி காரணம் இதை சரிசெய்ய விரும்பியது. யோகத்தில் அமர்ந்தது. அருகே அமர்ந்த இறைவி அதாவது இச்சா சக்தி அதாவது பிரபஞ்சத்தின் இயக்கங்களை ஊக்குவிக்கின்ற ஒரு கிரியா ஊக்கி இந்த யோகம் கண்டு சிரித்தது.

அதாவது இறைவி இறைவனைப் பார்த்து சிரித்தாள். ஒரு விஷயம் இருந்தால்தானே வளர்ச்சி. விஷயமே இல்லாதபோது வளர்ச்சிக்கு என்ன வேலை?

# அகல் விளக்கு



பாலகுமாரன்





விதையைப் பார்த்து வளர்ந்த மரம் சிரிக்கலாமா. கேலி செய்யலாமா? விதை என்ற சக்தியின் விளைவுதானே மரம். விதை என்ற சக்தியைப் பார்த்து, வளர்ச்சி என்ற சக்தி சிரிப்பதில் எவ்வளவு பெரிய அபத்தம் இருக்கிறது.

பிரபஞ்ச சக்தியின் ஆதிவிதை அதாவது இறைவன் கோபப்பட்டார். வளர்ச்சியை விலக்கினார். வளர்ச்சிக்கு விலர்சம் இல்லாமல் போயிற்று. அதன் வாழ்க்கைக்கு அர்த்தம் இல்லாது போயிற்று. பிரிந்த இறைவி தன் தவறை உணர்ந்தாள். இறைவனை நோக்கி தவம் இருந்தாள். இடைவிடாது மன்னிப்பு கேட்டாள். இறைவன் உருகினார். மறுபடியும் வளர்ச்சியை தன்னோடு இணைத்துக் கொண்டார்.

இறைவி தவம் செய்த இடம் காவிரிக் கரையோரம். ஜம்புவனம். அதாவது நாவல் மரங்கள் அடர்த்தியாய் வளர்ந்த காடு.

நாவல் என்றால் என்ன? இனிப்பை குறைக்கின்ற துவர்ப்பு. இனிப்பு என்பது அட்டகாசம். துவர்ப்பு என்பது இனிப்புக்கு எதிர்ப்பதம். அடக்கம். உள்ளார்ந்த அமைதி. அந்த இடத்திலிருந்து, அதாவது, அடக்கத்திலிருந்து இறைவி பூஜை செய்தாள்.

என்ன பூஜை? எந்தவிதமான வடிவம். நதி [illegible] பெண்மையான சிரிப்பு. இடதும்

வலதும் ஓடுகிற அலையல். பொறுமையற்ற விரைவு. இதுதான் நதி என்ற சக்தியின் குணம். நிலையில்லாத்தன்மை கொண்ட விதம்.

எதனால் விலக்கப்பட்டாளோ, இறைவி அதையே பூஜிக்கத் துவங்கினாள். வளர்ச்சி என்பது நகர்வு. நதி என்பதும் நகர்வு. நகரும் குணமுள்ளது நகரும் குணமுள்ளதை பூஜை செய்தது. அதாவது தன்னையே உற்றுப் பார்த்தது.

புரியவில்லையா. இப்போது உவமானமாக சொல்கிறேன் பாருங்கள்.

இறைவி நதி நீரை லிங்கமாக மாற்றி, நீர் உருவமாக செய்து, வழிபட்டாள். அதாவது திருவானைக்காவலில் இருப்பது அப்பு லிங்கம். அப்பு என்றால் நீர்

நீரை லிங்கமாக செய்ய முடியுமா? செய்தால் நம் கண்ணுக்கு புலப்படுமா? அங்கு மிகச் சிறந்த கல்லால் ஒரு லிங்கம் செய்து நாம் பார்க்க வைத்துவிட்டு, கருவறை தரையிலிருந்தும், சுவற்றிலிருந்தும், காவிரி நீர் கசியும்படியாக வைத்துவிட்டார்கள்.

கருவறை முழுவதும் அவ்வப்போது நீர் பொங்கும், போகும். இப்போது ஊற்றுக்கண் அடைபட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். சரி செய்ய யாருக்கும் தெரியவில்லை.

ஆனால், என் சிறு வயதில் நீர் உள்ளே ஊற்றாக வருவதும், பிறகு மறைவதையும் உட்கார்ந்து பார்த்திருக்கிறேன்.

இன்னும் சுருக்கமாகச் சொன்னால், பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய தண்ணீரை, இந்துக்கள் இங்கே பூஜை செய்கிறார்கள்.

இதுதான் திருவானைக்காவல். அதாவது ஜம்புகேஸ்வரத்தின் அடிப்படைத் தத்துவம்.

அதென்ன ஆனைக்காவல்? இது யானை காவல் இருந்த இடம். எல்லாம் வல்ல இறைவருக்கு யானை எதற்கு காவல்?

மறுபடியும் ஒரு கதை. ஒரு தத்துவத்தை சொல்ல ஒரு நாடகம்.

அப்புலிங்கமான ஜம்புகேஸ்வரர் மீது கூரை

இல்லையே என்று ஒரு சிலந்தி வருத்தப்பட்டது. சிலந்திக்கு இந்த எண்ணம் வரக்கூடாதா? மனிதர் கட்டும் கருங்கற் கோவில்தான் உசத்தியா? மனிதர் கருங்கற் கோவில் கட்டினால், சிலந்தி என்ன கோவில் கட்டும்?

அந்த சிலந்தி தன் எச்சிலால் கோவில் கட்டியது. எச்சில் கூட அல்ல. பிருஷ்ட பாகத்திலிருந்து வெளியேறுவதற்கு நாம் வேறு பெயர் தான் சொல்வோம். நமக்குத்தான் அது அசிங்கம். ஒட்டடை. சிலந்திக்கு அப்படி அல்லவே.

இறைவன் மீது பூச்சிகள் வழாவண்ணம் மிகப்பெரிய வலை கட்டி, வணங்கி விடை பெற்றது. இரவெல்லாம் அதற்கு வேலை செய்தது.

பகல் நேரத்தில் யானை வந்தது. சிலந்திக்கு நேர் எதிர்ப்பதம் யானை. ஜம்புகேஸ்வரரைப் பார்த்ததும் துதிக்கை தூக்கி பிளிறியது. காவிரி நீர் கொண்டு வந்து. ஒட்டடைகளை அடித்து விலக்கி, துதிக்கையால் நீர் பெய்து, சுத்தம் செய்து, அபிஷேகம் செய்தது.

இரவு கலைந்த வலை பார்த்து, சிலந்தி கோபம் கொண்டது. எந்த மூடன் நான் கட்டிய அழகிய கோவிலை கலைத்தான் என்று நொந்து கொண்டது. மறுபடி கட்டியது முன்னிலும் பெரியதாகக் கட்டியது.

'சீ, இந்த எச்சில் சிலந்தி செய்கிற வேலையைப் பார்.' இந்த முறை நாலா பக்கமும் யானை கோபமாய் நீரை பீய்ச்சி அடித்தது. சிலந்தி ஒளிந்து கொண்டது.

இரவும் பகலும் இந்த சண்டை தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

இந்தக் கதை என்ன சொல்கிறது. யோசிப்போம்,

சிலந்தி என்பது மனம். இடைவிடாது எண்ணங்களை நெசவு செய்து கொண்டிருக்கும். வலை பின்னிக் கொண்டிருக்கும் மனம். மனம் சிறியது., சூட்சுமமானது.

மனம் தன்னிலிருந்தே விஷயங்களை உருவாக்கி, தன்னைச் சுற்றி பின்னிக் கொள்ளும் தன்மை உடையது.

யானை என்பது உடல் வலிவு. மிருகங்களில் உயரமும், அகலமும் கொண்ட உருவம். கோபமிக்க குணம். எதையாவது அழித்துக் கொண்டே இருக்கின்ற

புத்தி. பெருந்தீனி ஆரவாரப் பிளிறல். மதம் கொண்ட நிர்மூடம். சீர்தூக்கிப் பார்க்காத செயல். சதா அசைந்து கொண்டே இருக்கிற தன்மை.

இப்போது யோசித்துப் பாருங்கள். மானஸ பூஜை சரியா? அபிஷேக ஆராதனை சரியா? இடைவிடாது இறைவன் சிந்தனையோடு இருப்பது உயர்வா? இல்லை இங்கிருந்து அங்கு போய், அங்கிருந்து இங்கு வந்து யாத்திரைக்கு அலையும் பக்தர்கள் உயர்வா?

மனசுள் செய்யப்படும் மந்திர ஜபம் சரியா? அல்லது மலர் சொரிந்து செய்யப்படும் சந்தனாபிஷேகம் உயர்வா?

இந்த இரண்டு எண்ணங்களுக்கும் சண்டை நடந்தது. சிலந்தி யானையின் தும்பிக்கைக்குள் புகுந்து, விஷம் இறக்க, யானை இறந்தது. யானையின் தும்பிக்கை முறுக்கலில் சிலந்தியும் நசுங்கி செத்தது.

இதுதான் கதை முடிவு. கடவுளே... இதில் எது சரி? இரண்டுமே சரி என்பதால்தான் இந்த தீர்வு. அவரவர் பூஜையை அவரவர் அன்பாக செய்து கொண்டிருக்கலாம். அவரவர் பார்வையில் அவரவர் பூஜை உசத்தி. மீறி உயர்வு, தாழ்வு என்று சண்டையிட்டபோது, இரண்டு பேருக்குமே மரணம் வந்தது.

இந்தக் கதை மதப்பிரிவுகளுக்கும் பொருந்தும். இஸ்லாமியரின் தொழுகை பெரிதா. இந்துக்களின் வேள்வி பெரிதா? சண்டையிட்டால் இரண்டு பேருக்குமே மரணம் நிச்சயம். தன்னைப்பற்றி அலட்டிக் கொள்கிறவன்தான், பிறரைப்பற்றி குறை சொல்கிறான்.

யானையின் பார்வையில் சிலந்தி அசிங்கம். சிலந்தியின் பார்வையில் யானை காட்டுமிராண்டித்தனம். அமைதியாக வாழ்ந்திருந்தால், ஞானம் கிடைத்திருக்கும். சண்டையிட, மரணம் கிடைத்தது.

திருவானைக்காவல் ஞான அதிர்வுகள் கொண்ட இடம். இறைவனுக்கு இறைவி இங்கு மனைவி அல்ல. மாணவி. பிரபஞ்ச ரகசியத்தை, படைப்பு ரகசியத்தை வித்து வளர்ச்சிக்கு இங்கு சொல்லிக் கொடுத்தது. சிவம் சக்திக்கு எடுத்துரைத்தது.

அதனால்தான் இங்கு திருக்கல்யாண வைபோகம்

இல்லை. மாறாய் தினசரி இறைவி பூஜை செய்யும் திருக்காட்சி உண்டு. அர்ச்சகர் புடவை அணிந்து, இறைவிபோல் வேடமிட்டு, தினமும் இறைவனுக்கு பூஜை செய்கிறார்.

அன்னை அகிலாண்டேஸ்வரி ஞானகாரணி. ஞானம் இல்லாத போதுதான், இல்வாழ்க்கை, தொழில் வாழ்க்கை, சுற்றுச் சூழல், உறவு, நட்பு எல்லாம் பாழாகிறது.

காசு இருந்தால் போதுமா? சந்தோஷம் வந்துவிடுமா? காசை செலவு செய்யும் ஞானம் வேண்டும். ஞானம் என்பது நிதானம். எதையும் சீர்தூக்கிப் பார்க்கும் குணம். ஆழ்ந்து சிந்திக்கின்ற திறன்.

தன் காதலை, காமத்தை, கோபத்தை, சந்தோஷத்தை, துக்கத்தை, வறுமையை ஒருவன் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். என்னைச் சுற்றி என்ன இருக்கிறது என்று நிதானமாய் யோசிக்க வேண்டும்.

யோசிக்கின்ற பக்குவத்தை தருபவள் திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி..

இளையராஜாவின் இசையில், கவிஞர் வாலி அற்புதமாக ஒரு வரி எழுதினார்.

அருளால் கரை புரண்டால் மனம் தளும்பாது ஒருநிலையும். ஒரு நாள் உனை நான் மறவாதருள்வாய் திரு அம்பிகையே.

இறையருளால் உயர்ந்து, செல்வம், கீர்த்தி, தேக ஆரோக்யம், குடும்ப நலன் இவை கரைபுரண்டு ஓடினாலும், என் மனம் கர்வப்பட்டு திரும்பிவிடக் கூடாது. அந்த வரத்தை எனக்கு தருவாயாக என்கிறார்.

ஞானம் மிக மிக முக்கியம். நல்ல குடும்ப வாழ்க்கைக்கு நிதானம்தான் ஆணிவேர். நிதானம் இல்லாத தன்மையால்தான் பலபேர் குடும்ப வாழ்க்கை சீரழிகின்றன. ஒருவர் மீது ஒருவருக்கு காழ்ப்பு ஏற்படுகிறது. காழ்ப்புதான் மிகப் பெரிய மனவேதனை. தெளிவுதான் மிகப்பெரிய சந்தோஷம்.

அகிலாண்டேஸ்வரி இல்லறத்தில் தெளிவு தருபவள். தெளிவால் வரும் குதூகலத்தை தருபவள்.

எதுகுறித்த மனப்பிணக்கு ஏற்பட்டாலும்,

எவரோடு கருத்து வேறுபாடு ஏற்பட்டாலும் அகிலாண்டேஸ்வரியைப் போய் தரிசனம் செய்யுங்கள். நான் சொன்ன கர்வக்கதைகள் யோசித்துப் பாருங்கள். அவள் திருப்பாதங்களை கெட்டியாகப் பற்றிக் கொள்ளுங்கள்.

அன்னை உடனே நிவாரணம் தருவாள். குறிப்பாய் பிணக்கற்ற குடும்பத்திற்கு அகிலாண்டேஸ்வரிதான் ஆதாரம். பிணக்கற்ற குடும்பம் எவ்வளவு பெரிய சந்தோஷம்.

அகிலாண்டேஸ்வரியின் சன்னதி எதிரே, ஒரு மரமேடை போடப்பட்டிருக்கும். அந்த மரமேடை மீது அமைதியாய் சற்று நேரம் உட்கார்ந்து கொள்ளுங்கள். அங்கு அமர்ந்தபடி, அகிலாண்டேஸ்வரியை உற்றுப் பாருங்கள். அகிலாண்டேஸ்வரி பேசுவாள். அகிலாண்டேவரிக்கு அருகே இருக்கும் தீபமும் பேசும். அந்த தீபமும் அகிலாண்டேஸ்வரிதான்.

அகிலாண்டேஸ்வரி கட்டுமஸ்தான பெண்மணி. கனிவான பார்வை. குறும்பான சிரிப்பு. அவள் சிறுமி அல்ல. முதிர் கன்னி. இப்படிதான் எனக்கு தோன்றுகிறது.

என்னைச் சுற்றி பல முதிர்கன்னிகளைப் பார்க்கும்போது, அகிலாண்டேஸ்வரியின் ஞாபகம் வருகிறது.

அப்படியென்ன முதிர்கன்னிகள் விசேஷம்? வாழ்க்கை பற்றிய தெளிவும், அதே சமயம் வாழ வேண்டுமென்ற ஆசையும் உடையவர்கள். ஆசை என்பது அனுபவிக்கப்படாமலும், அகற்றப்படாமலும் இருக்க வேண்டுமென்பதற்கு உதாரணமானவர்கள். (இது ஒரு மகா வாக்கியம். திரும்பத் திரும்ப யோசிக்க பலது புலப்படும்)

அகிலாண்டேஸ்வரி, ஞானேஸ்வரியாய் இருப்பதால்தான் ஆதிசங்கரரை கவர்ந்து இழுத்திருக்கிறாள். அவர் தாடக பிரதிஷ்டை செய்து கோவிலின் அதிர்வலைகளை சீராக்கி இருக்கிறார்.

அகிலாண்டேஸ்வரியால் கவர்ந்திழுக்கப்பட்ட பல மன்னர்கள், பல்வேறு நிலை மண்டபங்களைக் கட்ட, கோவில் பிரமாண்டமாய் அகன்று, விரிந்து அமர்ந்திருக்கிறது.

நந்தி பகவான் இருக்கின்ற கல்மண்டபமும், கோவிலின் பின்னே இருக்கின்ற நடன மண்டபமும், திராவிட சிற்ப கலைக்கு ஒரு அற்புதமான எடுத்துக்காட்டு. நடன மண்டபத்தில் இருக்கும் நான்கு தூண்களை, அதிலுள்ள நடனப் பெண்களின் சிலைகளை நான் ஒவ்வொரு முறையும் வியந்து பார்க்கிறேன். அங்கே சிறிது நேரம் அமர்ந்துவிட்டு வருவேன்.

திருவானைக்காவலுக்கு தனியே போக முயற்சி செய்யுங்கள். ஏதேனும் ஒரு மண்டபத்தில், காற்று வரும் இடமாய் பார்த்து, கண்மூடி அமர்ந்து கொள்ளுங்கள். உங்கள் குறை, நிறைகள் பற்றி உட்கார்ந்து யோசியுங்கள்.

தமிழ் நாட்டிலுள்ள சில கோவில்கள் தியானத்திற்கு ஏற்றவை. அதில் திருவனைக்காவலும் ஒன்று.

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கொடுத்த 'சாந்தி' என்ற பெண் யானை, முதல் பிரகாரத்திலேயே இருக்கும். அந்த யானைக்கு அகத்திக் கீரையோ, வாழைப் பழமோ கொடுங்கள். அந்த யானைப் பாகன் ஜம்புநாதன் என் நண்பர். என் வாசகர். அந்த யானை ஒரு நல்ல அம்சம். நல்ல ஆத்மா.

திருச்சிராப்பள்ளிக்கு போனால், திருவானைக்காவலை தவறவிட வேண்டாம்.

திருவானைக்கா தேவரடியார் தாசி மோகனாங்கியின் கதை ஒன்று இருக்கிறது. அதை பின்னொரு சமயம் தத்துவ விளக்கத்தோடு விவரித்து எழுதுகிறேன்.

உங்கள் குடும்பம் கட்டுக்கோப்பாய் வளர, கவலை இல்லாமல் மலர, அகிலாண்டேஸ்வரி உடனுறை ஜம்புகேஸ்வரரை தரிசனம் செய்யுங்கள்.

போய் வந்ததைப் பற்றி எனக்கு ஒரு வரி எழுதுங்கள்.

- தொடரும்



**வாசகர்களே!**

கேள்வியும் கேட்டு பதிலும் எழுதி அனுப்ப வேண்டும். தேர்வு பெறும் கேள்வி பதிலுக்கு ரூ.50/- பரிசு உண்டு.

# ஆல்ரவுண்டர் பக்கம்

## □ ஆண் பெண் தூய பேனா நட்பு சாத்தியம் தானா?

★ சாத்தியம்தான். ஆனால்; சாத்தியப் படுதலுக்கு. உண்மை பேசுதலும், நேர்மையுடன் இருத்தலும். ஒழுக்கம் காத்தலும் மிகமுக்கியம்.

பேனா நட்பில் ஆண் பெண்ணாகவும் பெண் ஆணாகவும் மாறுவதால்; ஒழுக்கக்கேடு ஆரம்பமாகிறது. ஆணே பெண்ணின் பெயரில் கடிதமெழுதி, இன்னொரு ஆணை ஏமாற்றி, அவன் நேசமுடன் எழுதிய பதில் கடிதத்தை பலரிடமும் காட்டி, கேலிசெய்தல் என்பது நடைபெறத்தான்



"அங்க ஒருத்தரை தர்ம அடி அடிக்கிறாங்களே யார் அவர்?"

"அவர்தான் தர்மர்."

இரா.கமலக்கண்ணன்

நாமகிரிப்பேட்டை.



செய்கிறது. இது பெண்களுக்கும் பொருந்தும்.

பேனா நட்பில் கடிதமெழுதி, கடிதமெழுதி, நட்பு பலப்பட்டு, ஒருவர் வசதிகளை மற்றவர் அறிந்து கொண்டு, அதன்மூலம் சிறு உதவி கேட்டு, பிறகு பேருதவியான பண உதவி கேட்டு முதலாமவர் விழித்துக் கொள்ள, அந்த நட்பு அறுபட்டுப்போகிறது.

சிந்தனைத்தீனிக்கும், மன ஆறுதலுக்கு மட்டுமே பேனா நட்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதில், 'நேரில் சந்திக்கிறேன்' என்பதற்கு வாய்ப்பே இல்லை, நேரில் உரையாட முடியாத பல விஷயங்களை, கடிதத்தின் மூலமாய், ஒருவருக்கொருவர் பரிமாறி, அதன்மூலம் நட்பு இறுகுதலே சிறந்தது. அப்போதுதான், தூயநட்பு உண்மையை நோக்கி நகரும்.

தூயபேனா நட்பில், காதல் வரலாமா? தாராளமாக வரலாம். ஆனால், புரிந்து கொள்ளல் அவசியம். ஏனெனில், அம்மா, அக்கா, அண்ணன், தம்பி, தங்கை, தோழி என்று பல்வேறு உறவுகளாய் பேனா நட்பு மாறும்போது, காதலாக மலர்வதில் குற்றமேதுமில்லை. ஆனால், இது ரசவாதம் போலும் உருமாற, இருவரும் காலம் கனியும்வரை காத்திருக்க வேண்டும்.

ஆனால், ஆண் பெண் தூய பேனா நட்பு இனிமையான, மனசை இதப்படுத்துகிற விஷயம். இது ஆயுள் பரியந்தமும் தொடர்வது என்பது காலதேவனின் கைகளில் அல்ல, நம் நேர்மையில் இருக்கிறது.

தூய நட்பு, ஒழுக்கம் சம்பந்தப்பட்டது. ஒழுக்கம் கற்பு சம்பந்தப்பட்டது. நட்பைக்கூட கற்பைப்போல எண்ணினால், ஆண் பெண் தூய பேனா நட்பு, காலகாலங்களுக்கும் சாத்தியம்தான்.

எஸ்.ரேவதி,

தசரதபுரம், சென்னை -26.

வாசகர்களே!
விமர்சனக்கடிதங்கள் வரவேற்கப்படுகின்றன. பரிசு பெறும் விமர்சனக் கடிதம், பிரசுரம் செய்யப்படுவதோடு எழுத்துச்சித்தர் கையெழுத்திட்ட நாவல் ஒன்றையும் பரிசாகப் பெறும்.

# தனிமை தவம்

## பரிசு பெறும் வாசகர் விமர்சனம்

பொதுவாக யாராவது வாய் அசைத்தாலே, அசை போடுவதை கிண்டல் செய்யும் நாம், எதையும் உணராதவர்கள். நல்லவற்றை அவ்வளவு சீக்கிரம் ஏற்றுக்கொள்ள மாட்டோம். ஆனால், உங்கள் தனிமை தவம் படித்து முடித்தவுடன், தியானம் செய்தது போன்றதொரு உணர்வு ஏற்பட்டது. முன்பெல்லாம் சாப்பிடும்போதும், டெலிவிஷன் பார்க்கும்போதும் நடுநடுவே உங்கள் நாவலை படிப்பேன். ஆனால் இப்போது அப்படியில்லை. தியானம் செய்வது போல, உங்கள் நாவலை படிக்கிறேன் முழுதாக.

எங்கள் மதத்தில் பத்து பேரை கொன்றுவிட்டாயா? பார். அதற்கு பதிலாக உங்கள் மதத்திலுள்ளவர்கள் இருபதுபேரை கொல்லுகிறோம் என்றவர்களுக்கு சரியான சவுக்கடி உங்கள் தனிமை தவம். பத்துமுறை கீழே விழுந்தாலும், பதினோராவது முறையில் எழுந்து நிற்பதே வீரம் என்று எவ்வளவு அழகாக சொல்லியிருக்கிறீர்கள். தாயைத்தவிர, வேறெந்த பெண்ணையும், சகோதரியாக ஏற்றுகொள்ளாத, நினைத்துக் கூட பார்க்கமுடியாத இந்த சமூகத்துக்கு பரசுராமர் கதை ஒரு பாடம். எண்பத்தி நான்கு பிறவிகளுக்குப் பிறகே, ஒவ்வொரு உயிர்க்கும் மனிதப் பிறவி கிடைக்கிறது என்கிறது விஷ்ணு புராணம். ஆனால், அப்படி கிடைக்கின்ற பிறவியை; ஒரு உதாரணமான வாழ்க்கையாய் வாழ யாரும் ஆசைப்படுவதில்லை. உங்கள் எழுத்துக்களை படிக்கும் எல்லோருக்கும் நிச்சயம் இப்படித்தான் வாழவேண்டும் என்ற நல்ல உணர்வு ஏற்படும்.

அரசன் என்கிற எஜமானன் பற்றி நீங்கள் கூறியிருப்பது, மேலதிகாரிகளிடம் ஒரு சாதாரண ஊழியன் எப்படி நடந்து கொள்வது என்பதைக் கற்றுத் தந்தது. பெண்ணாசை வெறி பிடித்து அலைபவர்களுக்கு, கீசகன் முடிவு ஒரு உதாரணம். கத்தி எடுத்தவன் கத்தியாலே சாவதுபோல, பெண்ணாசை

பிடித்தவன். அந்த ஆசையாலே சாகிறான்

தொடர்ந்து உங்கள் எழுத்துகளை நான் சுவாசித்தால, என் ஆன்மா மேலும் மேலும் பக்குவப்படும். பலப்படும். எவ்வளவு ஆழகாக சொல்லித்தருகிறீர்கள் ஒரு தாயின் அன்பையும், தந்தையின் அறிவையும், காதலியின் அரவணைப்பையும், நண்பனின் அறிவுரையையும் உங்களின் எழுத்தில் காண்கிறேன். இன்னும் நிறையச் சொல்லிக் கொடுங்கள். உங்கள் எழுத்துக்களை படித்துக் கொண்டிருக்கும் எந்தவொரு இளைஞனும் தப்பான வழியில், தப்பான செயல்களை செய்யமாட்டான் என்பது நிச்சயம். நல்லவர்களின் பக்கத்தில் இருப்பது மட்டுமல்ல அவர்களின் எழுத்தை படிப்பதும் பாக்கியம்தான்.

**வே.பாபு,**
17, திரு.வி.க பாதை, அம்மாப்பேட்டை,
சேலம் - 636 003

## சிறப்பு கடிதம்

ஒவ்வொரு மாதமும் பல்சுவை நாவலில் தங்களது முகத்தை பார்க்கும்பொழுதே மனதில் ஓர் பரவசம் சூழும். என் கண்மணித்தாமரை என்னை வெகுவாக பாதித்தது. தங்களிடம் அதைப்பற்றி நேரில் விமர்சித்தபோது 40 வயதுக்குமேல் படி. வேறுவிதமாகப் புரியும் என்று சொன்னீர்கள். உண்மைதான் ஒரு நான்கு மாதம் கழித்து படித்தேன். அது வேறுவிதமாய் புரிந்தது. அடுத்து சிம்மாசனம், தமிழ் இலக்கியம் படித்த எனக்குப் பல இலக்கிய விஷயங்களை. குமரகுருபரர் பற்றிய வரலாற்றை மிக எளிதாக புரியவைத்தது. நான் பலரிடமும் கேட்டேன். அவர்கள் இவ்வளவு எளிமையாக, விரிவாக எனக்குச் சொல்லவில்லை. இப்பொழுது 'தனிமை தவம்'. மகாபாரதம் பரவலாக அனைவருக்கும் நன்றாக தெரிந்த கதை. ஆனால் அனைவரும் மேலோட்டமாக அறிந்த கதையை, மிக எளியதாக, விரிவாக, நமக்குள் எழும் வினாக்களை சிந்தித்து, வாழ்வியல் நோக்கில், ஞான வழியில் மிக அற்புதமாகச் சொல்லியிருக்கிறீர்கள்

படிக்கப் படிக்க ஒரு நாடகம் பார்ப்பதை போன்ற Feeling எதை விமர்சிப்பது? எதை விடுவது? குறிப்பாக காதல், காமம் போன்ற உணர்ச்சிகளுக்கு அறிவுப்பூர்வமான விளக்கம் அப்ப்பா...! உங்களால் மட்டுமே இவ்வாறு எங்களது மனதை வசப்படுத்த இயலும்.

**சி.ரவிச்சந்திரன்,**
விஷ்ணுபுரம். - 609506.



போகும் வழியெல்லாம்
மேடு, பள்ளங்கள்....
இருந்தாலும்
வண்டி மாடு என்னவோ
போய்க் கொண்டு தான் இருக்கிறது.

அபிமன்யு,
எழுமலை.



அம்மா மற்றும் உறவினர்களின்
அழுகைகளோடு
இறுக்கமாய் நிகழ்ந்தது
அப்பாவின் திதி.

வீட்டு முற்றத்தில்
இலைபோட்டு
காக்கைக்கு படையலிட்டாள்
தங்கை.

யார் யாரோ வந்தழைத்தும்
வராத காக்கைகள்
கூட்டமாய் வந்துவிட்டன
அம்மா குரல் கொடுத்ததும்.

சாதத்தைக் கிளறி
சாம்பாரைக் குதப்பி
காலால் மிதித்து
வடையைக் கடித்து
அப்பளத்தை நுகர்ந்து
பொறியலை அலகால் தீண்டி
வந்த தடம்தெரிய எச்சமிட்டு
வயிறு நிரம்பியதும்
பறந்து சென்ற காக்கைகளுள்
எந்தக் காக்கை
என் அப்பாவாய்
இருந்திருக்கும்.

மு.மாறன்,
சென்னை.



கம்பிமேல் நடந்து
வயிறு கழுவும்
கழைக் கூத்தாடியாகவோ

பொம்மலாட்ட
பொம்மை செய்யும்
மரத்தச்சனாகவோ

வயல்வெளியில்
களை எடுக்கும் தினக் கூலியாகவோ

கடலிலோ ஆற்றிலோ
வலைவீசி மீன்பிடிப்பவராகவோ
இருந்திருக்கலாம்.
இப்படி தண்டச் சோறு
என்று பெயர் எடுப்பதற்கு
பதிலாக.

**சு.செந்தில் குமார்,**
**கும்மிடிப்பூண்டி.**

தேவைப்படும் ஒன்றைத் தேடுகிறபோது
கிடைக்கிறது
தேவைப்படாத ஒன்று.

தேவைப்படாதென ஒதுக்கிய ஒன்றை
தேவைப்படுகிற நேரங்களில்
தேடுகிறபோது
கிடைத்து விடுகிறது.
தற்பொழுது தேவைப்படாத
ஏற்கனவே தேடின ஒன்று.

எக்குத்தப்பான சமயங்களில்
பலருக்கும்
பொருந்தி விடுகிற வாழ்வும்
இப்படித்தானோ?

**சேது ஸ்ரீனிவாஸ்,**
**மதுரை.**



வயிற்றுப் பிழைப்புக்காய்
அலுவலகக் கோப்புகளில்
தாய்மை தொலைத்து விட்டு
வீடு திரும்புகையில்,
தன்மார்பு தேடித்தவிக்கும்
மழலையின் நினைப்பு,
பால்பவுடர்
விளம்பரப்பலகை பார்த்து
வெடிக்கும்.

**கோபிநாத் ஆத்ரேயா,**
**ஆத்தூர்.**



நீங்களோ நானோ
எதிரிகளிடம் -
அவர்கள் எத்தனை
கொடியவர்களாயிருந்தாலும்,
மரியாதை
செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஏனெனில்
அவர்களால்தான் -
நம்
பலம் பலவீனங்களை
சரியாக மதிப்பிட்டு
அதற்கேற்றாற்போல்
நடந்துகொள்ள முடிகிறது.

இதில்
இன்னுமொரு
துர்பாக்கியமென்னவென்றால்
ஒரு
திறமையான எதிரி
கிடைக்காததைச்
சொல்லிக் கொள்ளலாம்.

**[illegible],**
**[illegible]**



அவ்வப்போது
அலங்கரித்துக் கொள்வது
அவசியமாய்போனாலும்,

இரவு, பகலென்பது
இல்லாமல் போனதில்
வருத்தமேதுமில்லை!

இயலவில்லையென்றாலும்
புன்னகைக்க வேண்டியிருக்கிறது.

விருப்பு, வெறுப்புகளுக்கு
விடுமுறை விட்டாயிற்று!

புணர்தல் கூட
ஏனோதானோவென்றுதான்.

என்றாலும்...
தீர்க்க முடிகிறது,

அவனது உடல் பசிக்காக
எனது வயிற்றுப்பசியை...!

ஆர்.சத்தியன்,
அகரக்கடம்பனூர்.



அடிக்கடி
நாக்கை நீட்டி
உள்ளிழுக்கும்
பல்லியைப் போலவே,
என்னுடைய் காமமும்.

நாக்கை நீட்டும்
ஒவ்வொரு தடவையும்
என் அறிவையும், தெளிவையும்
சேர்த்தல்லவா
உள்ளிழுக்கிறது!

பாரிசாகரன்,
ஒசூர்.



என்னிடம் ஒரு படகு உள்ளது
கடந்து செல்ல நதியும்
கண்ணெதிரே விரிந்திருக்கிறது

பாடிக் களித்திட
பாடல்கள் கைவசம் நிறைய

எனக்கே உரித்தான தனிமையுடன்
அளவளாவ ஆயிரம் கதைகளுண்டு

பார்த்துக் கொண்டாட
முழு பௌர்ணமி
மேலே ஒளிஅலை வீசும்

ஆயினும்,
நதியை ஒட்டிய மாபெரும் மலையே
என் இருப்பைத் தாழ்வென உணர்த்தி
இடைவெளியை உருவாக்கும்.

பயணம் செய்து கொண்டே
விம்முகிறேன்
உயரங்களைப் பார்த்தபடி

**அ.கார்த்திகேயன்,**
சேலம்.

தெற்கு வடக்காக
பயணப்பட சொன்னார்களென்று
கால்தேய நடந்த பின்பும்
எதுவும் தென்படவில்லை.
கிழக்கும் மேற்குமே
திசையெனக் களித்து
பொழுது கரையும் வரை
அமைந்த பயணத்திலும்
அறிந்தது எதுவுமில்லை.
இப்போது
திசைகளைத் தேடி
தினப்பயணம்!

**க.அம்சப்ரியா,**
சமத்தூர்.



பத்து மாதங்கள் வயிற்றில் சுமந்த
என் மகனைப் பற்றி
நன்றாகத் தெரியும்
என்றாள் என் அம்மா -
பக்கத்து வீட்டு பாட்டியிடம்.



உன்னை புரிந்து தான்
காதலிக்கவே ஆரம்பித்தேன்
என்றாள் காதலி.

இத்தனை நாள் பழகியும்
உன்னைப் பற்றி
எனக்குத் தெரியாத விஷயமா
என்றான் நண்பன்.

இப்படி பலபேர்... பலபேர்...
என்னைப் புரிந்தும் தெரிந்தும்
வைத்திருப்பதாக சொல்கிறார்கள்.

என் அறிவு
பலம் - பலவீனம்
நல்லது - கெட்டது என்று
எல்லாமே இவர்களுக்குத் தெரியுமா?

தெரிந்தால் என் அம்மா
வேலை பார்த்தால் தான்
வீட்டில் சோறு
எனச் சொல்வாளா.

காதலி இன்னொருவனைக்
கைப்பிடித்துத்தான் சென்றிருப்பாளா...
நண்பன் சின்ன சின்ன
விஷயங்களுக் கெல்லாம்
சுடு சொற்களை வீசுவானா.

ஒருவேளை என்னைப் பற்றி
என் நிழலுக்கு வேண்டுமானால்
தெரிந்திருக்கலாம்.
இன்னும் எனக்கு தான்
என்னை புரியவேயில்லை.

அபிமன்யு,
எழுமலை.

# பாலகுமாரன் பதில்கள்

*ஜெகதீசன்,*
*மயிலாடுதுறை*

☐ **எங்கள் கல்லூரியில் பேச அழைத்தால் ஏன் வர மறுக்கிறீர்கள். ஒரு முக்கியமான செமினார் நீங்கள் இல்லாமல் நடந்தது. நாங்கள் ஏமாற்றம் அடைந்தோம்.**

★ கல்லூரி செமினார்களில் நான் ஏமாற்றம் அடைகிறேன். செமினார் என்பது ஒரு நேரம் கொல்லி. எதிராளிக்கு புரிகிறதோ புரியவில்லையோ. நீதிபதிகளும், பேராசிரிய பெருந்தகைகளும் கல்வித் துறை அதிகாரிகளும் ஏகப்பட்ட குறிப்புகளோடு பேச வந்துவிடுகிறார்கள்.

வாழ்க்கை என்றால் என்ன? சுவாமி விவேகானந்தர் கூறுகிறார் என்று ஒரு புத்தகத்தை பிரித்து, மூன்று நான்கு பக்கம் ஆங்கிலத்தில் படிக்கிறார்கள் எதிரே மாணவர் கூட்டம் தூங்கி வழிகிறது, யாருக்கும் எதுவும் புரியவில்லை. புரிந்து கொள்ளும் அக்கறையும் இல்லை மாணவ, மாணவிகளை விட்டுவிட்டு கல்லூரியில் கற்பிப்பவர்கள் ஒவ்வொருவராய் எழுந்து பின்பக்கம் போய் மசால்வடை சாப்பிடுகிறார்கள். கடைசி வரிசையில் யாரோ உயிரே பாட்டு பாடுகிறார்கள். செமினார் போல ஒரு பொய்யான, போலியான அபத்தமான, அருவருப்பான சமாச்சாரம் வேறு எதுவும் இல்லை.

ஒரு கல்லூரி செமினாருக்கு போவதற்கு பதில், தொல்பொருள் கூடத்தை நூற்றி பதினேழாவது முறையாக சுற்றிப் பார்க்கலாம். ஒரு குட்டி தியேட்டரில் வீரபாண்டிய கட்டபொம்மன் படம் பார்க்கலாம். விவித பாரதி கேட்கலாம் அல்லது குப்புறப் படுத்துக் கொண்டு தூங்கலாம்.

வேலையில் ஆர்வமிருப்பவர்கள் செமினாருக்கு



பேசப் போக மாட்டார்கள். தயவுசெய்து கல்லூரி செமினார்களுக்கெல்லாம் என்னை கூப்பிடாதீர்கள். எனக்கு உண்மையாகவே நிறைய வேலை இருக்கிறது.

**நவநீதகிருஷ்ணன், மேற்கு மாம்பலம்.**

**☐ உங்களால் ஒரு வாரப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருக்க முடியுமா?**

★ முடியாது என்று நினைக்கிறேன். ஆசிரியர் தொழில் வேறு. எழுத்தாளனாக இருப்பது வேறு. அரசியல் விவகாரங்களோ, ஜோக்குகளோ கார்ட்டூன்களைப் பற்றியோ, குத்து தொலை போன்ற தொடர் நாவல்களையோ என்னால் சிந்திக்க முடியுமென்று தோன்றவில்லை. மற்றவர்களிடமிருந்து நல்ல எழுத்துக்களைப் பெறுவதற்கு, தனிப் பயிற்சி வேண்டும். பொறுமை வேண்டும். அதோடு மட்டுமில்லாமல், பத்திரிகையின் ஸ்தாபகர்களை, முதலாளிகளை அனுசரித்துப் போய்க் கொண்டும், உதவி ஆசிரியர்கள் செய்யும் துரோகங்களை சகித்துக் கொண்டும் உட்கார்ந்திருக்க வேண்டும் மற்றவைகளை எல்லாம் கூட செய்துவிடலாம். துரோகங்களை சகித்துக்கொள்வது என்னால் முடியாத காரியம்.

**கே. வேணுகோபால், மயிலாடுதுறை.**

**☐ நீங்கள் அடைந்த சமீபத்திய சந்தோஷம் என்ன?**

★ பல்சுவை நாவலில் வெளியான தனிமைதவத்திற்கு, தொலைபேசியிலும், கடிதம் மூலமாகவும் வந்த பாராட்டுக்கள். நான் நினைத்ததை விடவும் அதிகம்பேர் படித்து அதிகம் பேர் சந்தோஷப்பட்டது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது.

**சக்தி எஸ். இளங்கோவன், திருப்பூர்.**

**☐ நான் உங்கள் அன்பு வாசகன். உங்கள் நாவல்களால் என்னைச் சீர்படுத்திக் கொண்டவன். தினமும் பலமுறை உங்களை நினைக்கிறேன். நீங்கள் நலமாக வாழ வேண்டுமென்று இறைவனிடம் கைக்கூப்புகிறேன். உங்கள் எழுத்துக்களால் உங்கள் மாசற்ற உள்ளம் அறிந்ததால், பலகாலம் பழகிய எண்ணம் ஏற்படுகிறது.**

ஆனால் என்னை உங்கள் முன் அறிமுகப்படுத்த, ஆசி பெற வாய்பில்லாத தால் வேதனைப்படுகிறேன் நான் என்ன செய்ய?

★ இனிய இளங்கோவன் நாம் சந்திக்க வேண்டிய அவசியமில்லை நாம் சந்திப்பதால் மிக முக்கியமாக எதுவும் நிகழ்ந்து விடப் போவதில்லை. ஒரு எழுத்தாளனுடைய புத்தகங்கள் ஒரு வாசகனுக்கு போதும். அந்த எழுத்தாளனுடைய முன்னிலையோ, அறிமுகமோ அல்லது பேச்சோ தேவையில்லை.

இப்படி பேச ஆரம்பித்தால் நான் எழுதுவது பாதிக்கப்படும். எனவே, விலகியிருந்தே ஒருவரை ஒருவர் நேசிப்போம். முகம் தெரிந்து ஆகவேண்டியது எதுவும் இல்லை. உங்கள் கடிதங்கள் எனக்குப் போதும். என் எழுத்துக்கள் உங்களுக்குப் போதும். மற்றவையெல்லாம் பாசாங்குகளே.

*ரா.நடராஜன்,*
*விழுதியூர்.*

☐ எனக்கு தண்ணியடிக்கும் பழக்கமுள்ள நண்பர் ஒருவர் இருக்கிறார். அவர் பழக்கத்தை முறித்தாலும், மீண்டும் வந்து ஒட்டிக் கொள்கிறார். அவரிடம் என்ன சொன்னாலும், திட்டினாலும், கேளாமல் மீண்டும் மீண்டும் பேச முயல்கிறார். அவர் நட்பை முறிக்க வழி என்ன? தயவு செய்து சொல்லுங்கள்?

★ எனக்கு மது அருந்துபவர்களைப் பிடிக்காது மது அருந்திவிட்டு பேசுபவர்களோடு எதுவுமே பேச முடியாது என்பது என் கருத்து புத்தியில் தெளிவின்மை. நிற்றலில், நடத்தலில் அமைதியின்மை தரும் மது ஒரு மோசமான விஷயம். நண்பர் குடிக்காது தெளிவாக இருக்கும்போது தீர்மானமாக சொல்லிவிடுங்கள். இன்னொரு முறை நீங்கள் குடித்துவிட்டு நான் நிற்கும் இடத்திற்கு வந்தால், உங்களைக் கடுமையாக அவமானப் படுத்துவேன் என்று அவர் தெளிவாக இருக்கும்போது வேகமாகவும், உறுதியாகவும் சொல்லி விடுங்கள். குடித்துவிட்டு வந்தால், அவமானப்படுத்துங்கள். சிலசமயம் முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும்.

*ஜி.சரவணக்குமார்,*
*அம்பத்தூர்.*

☐ ஒரு கவிதைப் பிறக்கப் பிரகாசப்படும்போது ஒவ்வொரு கவிஞரும் பெரும்பாலும் தன்னை ஒரு பெண்ணாகவே உணர்கிறார் என்று படித்தேன். தங்கள் அனுபவம் என்ன?

★ இது அதீதமான கற்பனை. இது ஒரு உவமை உதாரணத்திற்காகச் சொல்லப்பட்டது. எந்த ஆணும்

தன்னைப் பெண்ணாக வெல்லாம் கற்பனை செய்து கொள்ளமுடியாது இது ஒரு அலட்டலுக்காக. சொல்லப் பட்டது. மற்றபடி ஆண் ஆண்தான் பெண் பெண் தான். படைப்பதாலேயே ஆண் பெண்ணாகி விடமுடியாது. ஆண் தன்மை ஆணினுடைய படைப்புகளில் நிச்சயம் இருக்கும்.

***கே. நாகமாணிக்கம், ஆனைக்கல்லானூர்.***

**☐ எழுத்தாளர் லா.ச. ராமாமிர்தம் படைப்புகளில் அவசியம் படிக்க வேண்டியதும், தங்களைக் கவர்ந்த படைப்பும் எது வென்று சொல்லுங்கள்?**

★ அவருடைய சிறுகதைகள் படிக்க வேண்டிய படைப்பிலக்கியம். நாவல்களில் அவருடைய 'புத்ரா' என்னைக் கவர்ந்தது.

***தியாகுரமேஷ், தாராபுரம்.***

**☐ என்க்கு எழுத ஆசையிருக்கிறது. எழுத அமர்ந்தால் என்ன எழுதுவது என்று குழப்பமாக இருக்கிறது. ஒரு முறை உங்கள் மெர்க்குரிப் பூக்கள் நாவலைக் காப்பி எடுத்தேன். எனக்கு எழுத்து பூஸ்ட் தாருங்கள்?**

★ ஆசையிருந்து, எழுத என்ன செய்தி இருக்கிறது என்று குழம்பினால், நீங்கள் எழுதத் தயாராகவில்லை என்று அர்த்தம். உட்கார்ந்தால் எழுத்து வராது. யோசித்தால்தான் வரும். யோசிக்க நீங்கள் பக்குவப் படவில்லை பழக்கப்படவில்லை என்று அர்த்தம். எனவே, ஒரு விஷயத்தை கதையாக யோசிக்கப் பழகுங்கள். உள்ளுக்குள்ளேயே ஒரு முழுக் கதையையும் ஒவ்வொரு வாக்கியமாக யோசிப்பதற்கு முயற்சி செய்யுங்கள் சில வருடங்களில் உங்களுக்கு எழுத வரும்.

***சி. காந்திநேரு, அரிதாரிமங்கலம்.***

**☐ பொதுவாக எல்லா மக்களுக்கும், திரைப் படங்களின் மேல் இருக்கும் மோகம், எழுத்து மீது இருப்பதில்லையே. இது எதனால்?**

★ படிக்க புத்திசாலித்தனம் வேண்டும் பார்க்க எந்த புத்திசாலித்தனமும் தேவையில்லை, கண்களில் பார்வை மட்டும் இருந்தால் போதும். இருட்டில் உட்கார்ந்து திரைப்படம் பார்ப்பது ஒரு போதையான விஷயம். தன்னுடைய முகம் யாருக்கும் தெரியாது. படிக்க வெளிச்சம் வேண்டும். வெளிச்சத்திலிருக்க மக்களில் பல பேருக்கு பிடிக்கவில்லை. இருட்டில் இருக்கவே உள் மனது ஆசைப்படுகிறது. எனவே, இன்றல்ல, எல்லா காலங்

களிலும்மே கூத்து முக்கிய மாகவும் இலக்கியம் இரண் டாவதாகவும்தான் இருக்கும்

*எம். அசோக்ராஜா,*
*அரவக்குறிச்சிப்பட்டி.*

☐ **எண்பது வயதில் திரு மணம் செய்து கொண்ட நெல்சன் மண்டேலாவின் செயல்பாடு சரியா?**

★ அது அவர் திருமணம் அவர் விருப்பம் இது பற்றி அபிப்பிராயம் சொல்வது கூட அநாகரீகம்.

*ராம். ஜே.கே.,*
*வேலூர்-4*

☐ **மிருகங்களைப் புணரும் விபரீதக் கனவுகளோடு பாலகுமார்ன்கள் என்று 'நந்தன்' இதழில் ஆனர் ருனா என்பவர் எழுதி யிருக்கிறாரே படித்தீர்களா?**

★ இப்படி நான் எதுவும் எழுதியதில்லை. என்னைப் பற்றி சில நபர்களுக்கு மிரட்சி அதிகமிருக்கிறது நான் எழுதாததை. எழுதிய தாகச் சொல்லும் அற்பத்தன மிருக்கிறது இந்த விலாசம் இல்லாத ஆனாருனா என்ன இழவைச் சொல்லுகிறார் என்று எனக்குத் தெரிய வில்லை

*தியாகுரமேஷ்,*
*தாராபுரம்.*

☐ **வந்தோம், வாழ்ந்தோம், வாரிசுகளைத் தந் தோம் போனோம் என்றில்லாமல், ஏதாவது விட்டுவிட்டுப் போக வேண்டும். வாழ்ந் தற்கு அடையாளமாக என்று எண்ணி ஏங்கு கிறேன். என்ன செய்ய சொல் லுங்கள் தயவு கூர்ந்து?**

★ இது நீங்கள்தான் தீர்மானிக்க வேண்டும் உங் கள் தகுதி என்ன? உங்கள் நாட்டம் எதில்? உங்கள் பலம் எது? உங்கள் சூழ் நிலை எப்படி? என்பதெல் லாம் வைத்து உங்களை நீங்களே கணித்து ஏதேனும் செய்ய திட்டமிடுங்கள் வாழ்த்துக்கள்

*ஆங்கரை பைரவி,*
*லால்குடி.*

☐ **இலக்கியம் கிழிந்த போர்வை என்கிறாரே ராஜேஷ்குமார். இது குறித்து உங்கள் அபிப்ரா யம் என்ன?**

★ தான் மட்டுமே இலக் கியம் என்று ஒரு குருட்டுக் கும்பல் கூவிக் கொள்கிற போது, அந்த முட்டாள் தனத்தை எதிர்த்து ராஜேஷ் குமார் கோபப்பட்டிருக் கிறார். எது இலக்கியம், எது இல்லை என்பதை காலம் தீர்மானிக்கும். சிறுசிறு குழு வாக அமர்ந்து கொண்டு, நானே இலக்கியம் என்று மார் தட்டும் பேதமைமிக்க பித்துப் பிடித்தவர்களை தமிழ்நாட்டில் யாரும் மதிப்பதில்லை ராஜேஷ் குமாரும் மதித்திருக்க வேண் டாம் மதித்து பதில் சொல்லி யிருக்க வேண்டாம்

***கே. மூர்த்தி,***
***மதுராந்தகம்.***

☐ அடக்கமாக இருப்பது நல்லதா? ஆர்வாரமாக இருப்பது நல்லதா? நான் அடக்கமாக இருந்தால் அறிவிலி என்று சொல்கிறார்களே?

★ இந்தப் பேச்சையும் கேட்டுக்கொண்டு அமைதியாக இருப்பதுதான் அடக்கமாக இருப்பது. அடங்கியிருங்கள். அப்போதுதான் அடுத்தவரைப் பற்றி தெளிவாக அறிந்து கொள்ளமுடியும். பிறரை தெளிவாக அறிந்து கொண்டால் அவர்களைக் கையாளுவது சுலபம். மற்றவரை எளிதில் கையாளிவிட்டோமானால் ஜெயிப்பது உறுதி. எனவே, அடக்கமாகவே இருங்கள்.

***வெங்கி,***
***திண்டுக்கல்.***

☐ அய்யன், அப்பா, பிரதர், பாலா, சார், இதில் உங்களை எவ்விதம் அழைப்பது?

★ உங்களுக்கு எவ்விதம் அழைக்க விருப்பமோ அவ்விதம் அழைத்துக் கொள்ளலாம்.

***வி. சரவணன்,***
***உத்தம்பாளையம்.***

☐ நான் கத்திக் கத்தி பேசுகிறேன். அடிக்கடி கோபம் வேறு வந்து விடுகிறது. என்ன செய்ய?

★ தியானம் கற்றுக் கொள்ளுங்கள் இடைவிடாது செய்து வாருங்கள் இந்த வேதனை குறையும்.

***ஆர். கணேசபாண்டியன்,***
***மதுரை***

☐ சிவசங்கர் பாபா தன்னையே சிவன், தன்னையே ராமன், தன்னையே கிருஷ்ணன், என்று சொல்லிக் கொள்கிறாரே இது நிஜமா?

★ நீங்களும் உங்களை அவ்விதமே சொல்லிக் கொள்ளலாம். அதுவும் நிஜம்தான் எல்லா இடத்திலும் இருக்கும் சக்திதான் உங்களுக்குள்ளும் இருக்கிறது. ராமனுக்குள் இருந்த சக்திதான், கிருஷ்ணனுக்குள்ளும் இருந்தது கிருஷ்ணனுக்குள்ள சக்திதான், உங்களுக்கும் இருக்கிறது இதை யார் வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளலாம். சொல்லிக்கொள்கிற திமிர் அவரிடம் இருக்கிறது. உங்களிடம் இல்லை அவ்வளவே.

***சபாபதி,***
***திருச்சி-1.***

☐ ஹோமம், பஜனை, யாகம், தவம் போன்றவைகள் அகங்காரத்தை தான் வளர்க்கும் என்று ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி சொல்லுகிறாரே?

★ ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி கூட்டத்துக்கு போவது கூட அகங்காரத்தை வளர்த்திருக்

கிறது. ஜிட்டு கிருஷ்ண மூர்த்தியை படிப்பது கூட அகங்காரத்தை வளர்க்கக் கூடும். அகங்காரமாய் ஒரு விஷயத்தைச் செய்வது அகங்காரமின்றி செய்வது என்று உண்டு. எந்த விஷயத்தையும் அகங்காரமின்றியும் செய்யலாம். அப்படி செய்ய வேண்டும் என்று தான் இந்து மதம் வலியுறுத்துகிறது. அகங்காரம், செய்யும் விஷயத்தில் இல்லை. செய்கின்ற உங்களிடம் இருக்கிறது. உங்களால் அகங்காரத்தை தவிர்த்து விடமுடியுமெனில் பிறகு எது வேண்டுமானாலும் செய்யலாம்.

***கே. மல்லிகா,***
***மாயவரம்.***

**☐ உங்களுக்கு வாசனைத் திரவியங்கள் அதிகம் பிடிக்குமாமே?**

★ ஆமாம். அதிகம் பிடிக்கும். என் வீட்டில் பத்து பதினைந்து பாட்டில்கள் அடுக்கி வைத்திருக்கிறேன்.

***குமரிமுத்து,***
***செவிலியார்பாளையம்.***

**☐ ஆண்கள் பெண்களைக் கேலிச் செய்வது இயல்பு. பெண்களும் ஆண்களை அவ்வப்போது கேலி செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். இதற்கெல்லாம் சட்டம் கொண்டு வந்து தடுக்க முடியுமா என்ன?**

★ தடுப்பதற்காக சட்டம் கொண்டு வரவில்லை. எச்சரிப்பதற்காகத்தான், சட்டம் இருக்கிறது. இதை சட்டத்தால் தடுக்க முடியாது என்று எல்லோருக்கும் தெரியும். ஆனால், எல்லை மீறுகிறபோது எதுவும் ஆபாசமாகிவிடுகிறது. பெண்களை, ஆண்கள் ஒரு அளவோடு கேலி செய்தால் அது சந்தோஷமாக இருக்கும். பெண்களும் ரசிப்பார்கள். பதிலுக்கு பெண்களைக் கேலி செய்ய அனுமதித்து அதை ரசித்தால் இன்னும் சுவாரஸ்யமாக இருக்கும். ஆனால், காமத்தின் விளைவாக, குரோதத்தின் விளைவாக எழுப்பப்படும் கேலிகள் வன்முறையில் முடியும்.

ஒரு தண்ணீர் பாக்கெட்டை உங்கள் மீது பீய்ச்சினால் நீங்கள் சந்தோஷமா படுவீர்கள். இது அயோக்கியத்தனம். கையைப் பிடித்து உங்கள் தங்கையை இழுத்தால், நீங்கள் கைத்தட்டியா ரசிப்பீர்கள். இது கயவாளித்தனம். இங்குதான் சட்டம் தன்னுடைய கரத்தை நீட்டத் துவங்குகிறது.

***மா. தமிழ்மணி,***
***குரோம்பேட்டை.***

**☐ இன்றைய இளைஞர்களிடம் என்ன தவறு?**

★ சினிமாவை நிஜம் என்று நம்பிக் கொள்கிறார்கள். சினிமாவில் வரும் சண்டையைப் போன்று தானும்

சண்டை போட முடியும் என்று நினைக்கிறார்கள். சினிமாவில் பெண்களைக் கேலி செய்வதுபோல தானும் கேலி செய்யலாம் என்று உரிமை எடுத்துக் கொள்கிறார்கள். சினிமாவில் அழுவது போல் அழுகிறார்கள். சினிமாவில் காதலில் தோல்வியுற்று தாடி வளர்த்தால் இவர்களும் தாடி வளர்க்கிறார்கள். சினிமா ஒரு தவறான வழிகாட்டல், என்பது அவர்களுக்குப் புரியவில்லை. அது வழிகாட்ட ஏற்படுத்தப்பட்டதல்ல. வெறும் பொழுது போக்கு சாதனம் என்பது புரியவில்லை. சினிமாவை ரசிக்க கற்றுக்கொண்டு விட்டு பிறகு, மறந்து, நிஜ வாழ்க்கையில் ஈடுபட வேண்டும் என்று தெரியவில்லை. சினிமாவில் சிக்கிக் கொண்ட இளைஞர்கள் மீளுவது கடினம்.

***ஆர்.சுமதி,***
***பூந்தமல்லி.***

☐ இந்தியத் துணிகள் உலகத் தரம் வாய்ந்ததாக இருக்கின்றன. விதவிதமான சட்டைகள், பேண்ட்கள் ஆண்களுக்கு என்று வடிவமைக்கப்படுகின்றன. இப்போது போய் கதர் சட்டையும், வெள்ளை வேட்டியுமாய் வலம் வருகிறீர்களே. நீங்கள் ஏன் நன்றாக உடுத்தக் கூடாது?

★ உடைகள் மீது அயுர்ச்சி வந்துவிட்டது. மனம் உடைகளில் இருந்து விலகி விட்டது. கட்டம் போட்ட, கோடு போட்ட, சிக்கலான டிசைன்கள் உள்ள எதுவும் பார்க்கக் கூட பிடிக்கவில்லை. வெள்ளைச் சட்டை அமைதியாக இருக்கிறதாக நான் உணர்கிறேன். வெள்ளை உடுப்பு கம்பீரமாக இருப்பதாய் எனக்கு தோன்றுகிறது. வெள்ளை, அன்பு செய்வதாய் எனக்குப்படுகிறது எனவே, வெள்ளைத் துணிகளை நான் முற்றிலுமாய் உடுத்துகிறேன். உடை என் சொந்த விஷயம். அதில் தலையிட என் மனைவிக்கு கூட உரிமையில்லை.

***வி.எம்.மனோகரன்,***
***அத்திப்பட்டு.***

☐ பழைய பாடல்களில் தங்களுக்கு பிடித்த பாடல் எது?

★ காலங்களில் அவள் வசந்தம்.

***அனிதா சேகர்,***
***மதுரை.***

☐ எங்கள் ஊரில் தினமும் பத்து ஏழைக் குழந்தைகளுக்கு உணவு போட்டு உதவி செய்து கொண்டு இருந்தவர். திடீரென்று மாரடைப்பால் காலமாகி விட்டார். அவர் புண்ணியங்கள் அவரைக் காப்பாற்றவில்லை என்றுதானே இதைக் காட்டுகிறது.

★ இல்லை சகோதரி

அவ்வளவு பெரிய மதுரையில் அவர் இறப்பு உங்களுக்கு தெரிந்து உங்களை ஆட்டி வைக்கிறது எனில் அவர் செய்த புண்ணியம் காரணம். இதை செய்யாத வேறு எவரேனும் இறந்திருந்தால், நீங்கள் இத்தனை வருத்தபட்டிருக்க மாட்டீர்கள். எனக்கு எழுதியிருக்க மாட்டீர்கள். அவர் மறைவு உங்களையும், உங்களைப் போன்ற நூற்றுக்கணக்கான மக்களையும் பாதித்து இருக்கிறது. இதுதான் அவர் செய்த புண்ணியத்தின் மிகப் பெரிய வெற்றி. அவருடைய மரணமும், நீங்கள் சொல்வதைப் பார்த்தால் திடீரென்று அமைந்திருக்கிறது. எனவே, அது நல்ல சாவு என்று நினைக்கிறேன். செய்கிற உதவி, பதில் எதிர்பார்க்காமல் செய்யப்படுவது நல்லது. ஆனால், செய்யும் உதவிக்கு நிச்சயம் ஒரு நல்ல பலன் கிடைக்கும்.

*ஜே.மாதவன்*
*சென்னை*

□ **உறக்கத்திற்கும், விழிப்பிற்கும் மத்தியில் கற்பனை உலகத்தில் வாழ்கிறேன். காலை முதல் இரவு வரை எந்நேரமும் கற்பனை தான். சராசரி விழிப்பு நிலை வர என்ன செய்ய வேண்டும்.**

★ இந்தக் கற்பனை பழக்கமாகி விட்டால் அதிலிருந்து மீளுவது மிக கடினம். எனவே, கற்பனை எழும் போதெல்லாம் அதை தடுத்து நிறுத்திவிட முயற்சி செய்ய வேண்டும். மிக கடுமையாக முயலவேண்டும். போதும். கதை சொல்லாதே என்று மனதை அதட்டி நிறுத்த வேண்டும். இல்லை, இந்த வழியில் போகாதே என்று பிடித்து இழுக்க வேண்டும். கூர்ந்து கவனித்து செய்ய வேண்டிய வேலைகளில் ஈடுபட வேண்டும். கற்பனைகளிலிருந்து விடுபடுவதை பற்றி அதிகம் சொல்லித் தரமுடியாது. ஏனெனில் இது உள் மன விகாரம். நீங்களாகவே முயற்சி செய்து ஜெயிக்க வேண்டும்.

*மணிகண்டன்*
*ஈரோடு.*

□ **மிக நன்றாக எழுதும் மாலன், பிரபஞ்சன் ஆகியோர் படைப்புகள் பெரும்பான்மையான வாசகர்களை சென்றடைவதில்லையே ஏன்? இதற்கு வாசகர்கள் காரணமா? அல்லது பதிப்பகத்தாரா?**

★ உங்கள் கேள்வியே தவறு என்று நினைக்கிறேன். மாலன், பிரபஞ்சன் போன்றோர்களுக்கு நிறைய வாசகர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய எழுத்துக்களும் இலக்கிய தரமானவை. இலக்கிய தரமானவை வாசகர்களால் புரிந்து கொள்ள முடியாது என்ற பம்மாத்து எப்போதோ முடிந்துவிட்டது

## ஸ்நேகிதத்திற்கு

கண்ணம்மா, காதல் என்பது,
பிடித்தவருக்கு பிடிப்பதை செய்வது!
பிடிக்காததை செய்யாது இருப்பது!
அன்பே,
உனக்கு காதல் செய்வது பிடிக்காது!
அதனால் இனி எனக்கும் காதல் பிடிக்காது!
உன் தோழமைக்கு பரிசு,
என் உண்மையான காதல்

உன் நினைவுடன்,
ஈ.மாயன்,
நாகை.

இங்கு யாரும்
யாருக்கும்
தகவல்கள்
பரிமாறிக்
கொள்ளலாம்.
கட்டணம்
இல்லை.



## நெருடல்

அணுகுண்டென்கின்ற
அறிவியல் விஷத்தை
கைகளிலே வைத்திருப்பதற்காக
இந்தியன் என்கிற முறையில்
பெருமைப்படமுடிந்த என்னால்,
மனிதன் என்கிற முறையில் - பலரின்
மரணத்தை வைத்திருப்பதற்காய்
வேதனைப்படவே தோன்றுகிறது.

இதுநாள் வரை
எதிரிகளைக் கூட
மலர் தூவித்தான் வரவேற்றிருக்கிறது
பாரதத்தின் தெருக்கள்.

அப்பொழுதுகூட
மலர்களைப் பற்றிய வருத்தம்
மனதிற்குள் இருந்திருக்கிறது.

இந்தியா குறித்து
உலகம் கொண்டிருந்த மதிப்பு
பயமாக மாறியிருப்பதை
வெற்றியென்று சொல்வதற்கில்லை!

சு.சுரேஷ் கருணாகரன்,
திருப்பூர்.



# சகோதரிக்கு

இரண்டு மாதமாக நாம் பேசிக் கொள்வதில்லை. இதில் வருத்தமேதும் எனக்கில்லை. இருப்பினும், உன் தடாலடி முடிவும், ஆங்கார எண்ணங்களும் மிக மோசமானது என்றறிய, வெகுவாய் வருத்தம் எனக்கு.

அழகு என்பதும் கலைதான். கலைப்பயிற்சி தருபவள் நீ பயிற்சி தருபவள் ஆவேசப்படக் கூடாது. பொறாமை குணம் இருக்கக் கூடாது. ஒன்றை பத்தாய் திரித்துப் பேசுகிற ஈனபுத்தி இருத்தல் மட்டரகமான ஒன்று. இவை அத்தனையும் உனக்கு இருப்பதுதான் கொடுமை.

டி.வி.யில் லக்ஸ் சோப் விளம்பரமும் வரும். அடுத்தாற்போல, 'அதெல்லாம் மறந்துடுங்க' என்று மெடிமிக்ஸ் விளம்பரமும் வரும். இதற்காக, டி.வி.யை லக்ஸ் கம்பெனியோ, மெடிமிக்ஸ் கம்பெனியோ கோபித்துக் கொள்ளாது. 'என் கம்பெனி விளம்பரம் போடு. அந்தக் கம்பெனி விளம்பரம் போடாதே.' என்று நாம், எங்கும், யாரிடமும், சொல்லவே முடியாது. ஏனெனில், விளம்பரம் என்பது வியாபார யுக்தி. யுக்தி என்பது நம் திறமைக்கு சவால் விடுகிற விஷயம். எதைச் சொல்லி, மக்களைக் கவர்வது என்பதும், வருகிற கஸ்டமர்க்ளை தொடர்ந்து வரவழைக்க, என்ன செய்யலாம் என்று திட்டமிடுதலும், ஒரு நிறுவன முதலாளியின் அல்லது பொறுப்பாளியின் கடமை. எனவே, நான் என் கடமையை செய்தால், நீ கோபப்படுவதில் அர்த்தமேயில்லை.

வியாபாரத்தில் அடிப்படையே கடமைதான் சகோதரி. நம் கடமையை நான் செவ்வனே செய்துவர, நமக்கு வரவேண்டியது வந்தே தீரும். உன் சோற்றுத் தட்டில், மண் அள்ளி என்னால் வீச முடியாது. உன் வளர்ச்சியை என்னால் தடுக்க முடியாது.

**ஸ்ரீராம்,**
பொன்மலை, திருச்சி.

## தேவை

1994, 1993, மற்றும் அதற்கு முந்தைய வருடங்களின் கல்கண்டு வார இதழ்கள் எனக்கு தேவைப் படுகிறது. கொடுக்க விருப்பமுள்ள அன்பர்கள் தயவு செய்து எனது முகவரிக்கு தொடர்பு கொள்ளவும்.

கு. கிருஷ்ணமூர்த்தி,
பெரிய கிருஷ்ணாபுரம்,
சேலம் - 636 115.

## வேண்டுமா

என்னிடம் அனைத்து வார - மாத இதழ்களின் தீபாவளி மலர்கள் உள்ளது. தேவைப்படுவோர்க்கு விலைக்குத் தரத் தயார்.

அ. செபாஸ்டின்,
கடையல், களியல் அஞ்சல்,
குமரி மாவட்டம்.

## தேவை

எழுத்தாளர் அழகாபுரி அழகப்பன் அவர்கள் மாலைமதியில் எழுதிய 'செல்வா காதலிக்கிறாள்' என்ற நாவல் எனக்கு தேவைப்படுகிறது. இந்த நாவலை வைத்திருப்போர், அனுப்பினால் உரிய சன்மானம் அளிக்கப்படும்!

சி. சுப்பிரமணியம்,
3/200பி, சி.எஸ்.ஐ. நகர்,
பெருமாநல்லூர்,
திருப்பூர் - 641 666.

## கூப்பன்கள்

**வாசகர் பேரவை**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.

**இடைமேடை**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.

**உங்கள் பக்கம்**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.

**ஆல்ரவுண்டர் பக்கம்**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.

**வாசகர் விமர்சனம்**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.

**புதையல்**
பல்சுவை நாவல்
50/1, பைகிராப்ட்ஸ் சாலை
முதல் தெரு,
சென்னை - 600 014.



## அன்பிற்கினிய உனக்கு

நினைவிருக்கிறதா அந்த நாட்களை? பள்ளியில் பார்த்ததும், பழகிக் கொண்டதும் பசுமரத் தாணியாய் அல்லவா என் மனதில் பதிந்து விட்டது! ஆரம்பத்தில் நீயாகத்தான் முதலில் என்னிடம் வந்து பேசினாய்! நீ பேசுகிறாய் என்பதற்காக நான் உன்னிடத்தில் ஏதாவது பேச வேண்டியதாயிற்று. நாளடைவில் இன்னும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்க மாட்டாயா என் என் மனம் ஏங்கிற்று. அறியாத அந்த வயதில் நம்முடைய காதல் தித்திப்பாய் அல்லவா இனித்தது! இன்று அவைகளையெல்லாம் நினைக்கையில் அடுக்கடுக்காய் பல சம்பவங்கள் நினைவுக்கு வருகிறது. எனக்கு உன்னிடத்தில் பிடித்ததே உன்னுடைய அந்த பொறுமைதான்.

உன் வீட்டில் நீ மூத்தவளாயிருந்தும் உன் தங்கைக்கெல்லாம் நீதானே தங்கையாக இருந்தாய்! தலையை லேசாய் சாய்த்து சிரிப்பாயே அந்த சிரிப்பு! அந்தச் சிரிப்பை எனக்காகவே எங்கேனும் கற்றுக் கொண்டு வந்தாயோ? இன்று உன்னைப் பார்த்து பல ஆண்டுகள் ஆகிவிட்டது என்பதை நினைக்கும்பொழுது கண்ணீர் முட்டிக் கொண்டு வருகிறது. உன் நினைவில்தானே காலத்தையே கடத்துகிறேன்! உன் நினைவு என்னுள் எழும்போதெல்லாம் என்னுள் தற்கொலை எண்ணம் எழுவதை தடுக்க முடியவில்லையே! எனக்கு மட்டும் ஞாபக மறதி நோய் இருக்கக் கூடாதா? என்றுகூட மனம் புலம்புகிறது! எங்கிருந்தாலும் நீ வாழ்க என்றெல்லாம் என்னால் வாழ்த்த முடியாது! ஏனெனில் எனக்கந்த தாராள மனப்பான்மை கிடையாது. நீ எனக்குண்டானவள் என்ற எண்ணமோ தெரியவில்லை. உன்னை பிரிதொருவன் மனைவியாய் நினைத்துப் பார்க்க முடியவில்லை. இந்த கடிதத்தை நீ படிக்க முற்பட்டால் எனக்காக ஒரு துளி கண்ணீர் சிந்து! ப்ளீஸ்!

உன்னவன்,
அன்பு. ஆர்,
நாமக்கல் மாவட்டம்.

பாரதி
30, ராயபாளையம் புதூர்,
சித்தோடு - 638 102
ஈரோடு.

சி.மாதேஸ்
கலப்பம்பாடி (அஞ்சல்)
பெரும்பாலை,
தருமபுரி - 636 811

பஞ்சு
பி-148, எட்டாவது குறுக்குத்
தெரு,
அண்ணாநகர்,
செங்கல்பட்டு.

கே.ஆறுமுகம்
ஏ.எஸ்.ஜுவெல்லரி,
1, காசுக்கடை தெரு,
திருத்துறைப்பூண்டி.

# நட்பகம்



மேபேதமில்லா பேனா
நட்பு வேண்டி ஒரு
தேடலுடன் உலாவும்
இதயங்களுக்கு ஒத்தடம்
தரவே இந்தப்பகுதி.

சிவ.செல்வம்,
30, சென்ட்ரல் லாட்ஜ்
தெற்கு இரண்டாம் வீதி,
புதுக்கோட்டை - 622 001.

பி.கே.ராஜேந்தர்
1/104, குட்டியகவுண்டர்
தோட்டம்,
பெள்ளாதி,
கோவை - 641 104.

M.Suresh,
B-1, 07, Alaunia Lodge,
Sembawang Ship Yard,
Post Box No. 5003,
Singapore - 75 9956.

எஸ்.ஜெயசீலன் ஜேஸ்மிக்,
6ஏ, நாடார் புதுத் தெரு,
தென்காசி ரோடு,
சேத்தூர் - 626 121.

க.ஈஸ்வரன்
43-பி, அண்ணா காம்ப்ளக்ஸ்,
சிறுமுகை சாலை,
மேட்டுப் பாளையம் - 641 301.

# புறக்கணிக்கப் பட்டவள்

கூட்ட நெரிசலும், அழுகையொலியும் சீதாவைப் பாதிக்கவில்லை. ஏற்கனவே இதயம் உடைந்து செயலற்றிருந்தாள். அம்மாவின் கடைசிமூச்சு பெரும் அவஸ்தையுடன் வெளியேறியது. அம்மாவின் கை விரல்கள் இப்ராகீமின் அம்மாவின் கைகளை அழுத்திப் பிடித்து விட்டன. வழமைக்காக எல்லோரும் அழுதார்கள். அம்மாவின் கண்களில் வழிந்த கண்ணீர் இன்னும் காயவில்லை.

அம்மாவின் கண்ணீரை சீதா மட்டுமே அறிவாள். ஒரு சினேகம் தன் வாழ்வை தொலைக்கும் என்று அவள் நினைத்துக் கூட பார்க்கவில்லை.

இப்ராகீமின் குடும்பத்தாரும் சீதாவின் குடும்பத்தாரும் பக்கத்துப் பக்கத்து வீட்டிலிருந்தனர். சிறுவயது முதல் படிப்பு, விளையாட்டு, இப்படி எல்லாவற்றுக்குமே இப்ராகீம் தான் குரு. இரு வீட்டாரும் மிக நெருக்கமான உறவு வைத்திருந்தனர். ஆனால் சீதா தாவணிக்குள் நுழைந்தபோது இப்ராகீமின் நெருக்கம் அவளின் குடும்பத்தாருக்கு பிடிக்கவில்லை.

''சீதா...''

மூச்சிரைக்க வந்தான் இப்ராகீம்.

''என்ன ?''

''உனக்கு ரோஜாப்பூ ரொம்ப பிடிக்குமே, இதோ வாங்கிக்கோ''

அ. பானுமதி

**சிறுகதைப் போட்டியில் பிரசுரத்திற்கு தேர்வு பெற்ற கதை -1**

''அட, நான் கூட பூக்காரியை எதிர்பார்த்திட்டிருந்தேன். ரொம்ப நன்றி.''

''எங்க அப்பா ரோஜாத் தொட்டி வாங்கிட்டு வந்தார்''

''இனிமே, அதுல பூக்குற பூவெல்லாம் எனக்குத்தான்''

''கண்டிப்பா, இந்த ராணிக்கு தான்''



- என்றவாறு அவள் கன்னத்தைச் செல்லமாகத் தட்டினான்.

அனைத்தையுமே பார்த்துக் கொண்டிருந்த என் மூத்த அண்ணன் இப்ராகீம் செல்லவும் வீட்டில் ஒரு பெரிய சண்டையை உருவாக்கினான்.

"நா, என்ன தப்பு செய்தேன். குடும்பத்தோட ஏன் திட்டுறீங்க? சீதாவின் இந்த ஒரு கேள்வி மிக விபரீதமாக எடுத்துக் கொள்ளப்பட்டது. அண்ணன்களும், அக்காவும், அப்பாவும், அம்மாவும் என்று குடும்பத் தோடு அவளின் முதுகைப் பதம் பார்த்தனர்.

"அந்த பைய, கொடுக்கிற தைரியம். அதான் மதிக் காமப் பேசுறா"

"இந்த வயசுல காதல் கேட்குதோ. வெளில தலை காட்ட முடியல"

"இன்னையிலிருந்து இவ ஸ்கூலுக்கு போகக் கூடாது. கால ஒடிச்சி மூலையிலப் போடு"

- இப்படி பல அர்ச்சனைகளுடன் அவளின் ப்ளஸ்டூ படிப்பு பாதியிலே நிறுத்தப்பட்டது.

எனக்கும் இப்ராகீமிற்கும் காதலா? அட கடவுளே! ஒரு நல்ல நட்பை கேவலப்படுத்தி விட்டார்களே! இவர் களுக்கு ஒரு பெண் சிநேகமோ, ஆண் சிநேகமோ கிடைக்காததால் என் மீது பொறாமைப்பட்டு ஒன்றுமில் லாத விசயத்தை பெரிசுப்படுத்தி விட்டனர். இவர்க ளெல்லாம் என்கூட பிறந்தவர்களா, 'தூ' என்று சுவற்றைப் பார்த்துத் துப்பினாள்.

இரு குடும்பத்தாரும் பெரிய அதிர்ச்சியை வரவ ழைத்துக் கொண்டனர். ஆனால், அதிர்ச்சி அடைய வேண்டிய சீதாவும், இப்ராகீமும் மௌனமானார்கள். மனிதர்களைக் கண்டு வெறுத்தனர். இரு குடும்பத்தா ருக்கும் போக்குவரத்து இருந்தாலும் உண்மை அன்பு மறைந்து பார்மாலிட்டியாக மாறியது. சீதாவும், இப்ரா கீமும் விரோதிகள் போல் நடந்துக் கொண்டனர். ஒருவ ரையொருவர் பார்த்துக் கொள்வது கூட கிடையாது. அந்த தெருவில் சீதாவின் மீதும் இப்ராகீமின் மீதும் பொறாமைப்பட்டவர்கள் நிறைய சுவையான கதை களை பரிமாறிக் கொண்டும் பரப்பவும் செய்தனர். சீதாவின் உண்மையான படிப்பு வீணாவதை நினைத்து

வருந்திய ஆசிரியர் வீட்டிற்கு வந்து, அப்பாவிடம் அவமானப்பட்டுச் சென்றார்.

இரண்டே வருடத்தில் அவனின் குடும்பம் சற்றுத் தொலைவிற்கு இடம் மாறியது. சீதாவின் சுதந்திரம் வீட்டு வேலைகளோடு நின்றது. அக்காக்கள் இருவரும் சென்னை, மும்பை என்று வாழ்க்கைப்பட்டனர். அண்ணன்களும் தன் பங்குக்கு மாற்றலாகி சென்றுவிட்டனர். இடையில் அப்பா காலமாகி விட்டார். கடைசி அண்ணன் தன் ஆபீஸில் வேலை செய்யும் பெண்ணையே மணந்து கொண்டார். அந்த அண்ணி மட்டும் சீதாவின் மீது சிறிது கரிசனத்துடன் நடந்துக் கொண்டாள். சிறிது நிறமிழந்த சேலைகளை சீதாவிற்கு கொடுத்தாள். ஒவ்வொருத்தர் போடும் பிச்சைக் காசுகளில் நாட்களைத் தள்ளினாள். வெறுப்புடனும், சலிப்புடனும் முப்பத்தி ஐந்தாவது வய்தைத் தொட்டாள் சீதா.

கடந்த பல வருடங்களாக யாருடனும் அவள் பேசுவதில்லை. எந்திரம் போல் வேலை செய்வாள். சில நேரங்களில் அவளை பார்த்து அம்மா அழுவாள்.

''இனி, யாரு உனக்கு மாப்பிள்ளை பார்த்து நகை, நட்டு போட்டு பொறுப்பாக செய்யப் போறாங்க. உனக்கு அழகில்லையா, அறிவில்லையா, எல்லாமிருந்தும் இப்படி ஆயிடுச்சே உன் வாழ்க்கை. நா, செத்தா தூக்கிப் போட வர்றானுங்களோ, இல்லையோ? உன்ன பொறுப்பா எப்படி கவனிப்பாங்க? என் தலையெழுத்து உன்ன இப்படி கண்ணுலப் பார்க்கணும்னு எழுதியிருக்கு. மகராசன் போயி சேர்ந்தாரு. எனக்கு இன்னும் சீரழியணும்னு எழுதியிருக்கு.''

- அம்மாவின் புலம்பல் தொடரும் போது கிணற்றடியில் மௌனமாக அமர்ந்து வானத்தை வெறிப்பாள்.

கடைசி அண்ணனின் குடும்பத்திற்கு சம்பளமில்லாத வேலைக்காரியானாள். ஆனாலும் சிலநேரங்களில்

''கிழவி, மட்டுமிருந்துட்டாலும் பரவாயில்லை. இந்த சனியன் வேற. நா, ஒருத்தன் தான் உனக்கு மகனா? அவனுங்க வீட்ல போயி கிடக்கவேண்டியது தானே? போறவன் வர்றவனெல்லாம் இன்னும் உன் தங்கைக்கு கல்யாணம் பண்ணலையான்னு நச்சரிக்கிறாங்க. இந்த சனியனை எவன் தேடி வர்றான். அப்படியே

வந்தாலும் எவனாவது இவ, அவனோட ஆடுன ஆட்டத்தைச் சொல்லித் தட்டி விடுறாங் க"

- இப்படி அடிக்கடி கத்துவான்.

இதையெல்லாம் மீறி அவள் உயிரோடு நடமாடுவ தற்கு காரணம் இப்ராகீமிடம் செய்த சத்தியம்.

இப்ராகீம் எம்.காம் படித்துவிட்டு துபாயில் வேலை செய்கிறான். தன்னுடைய அக்கா, தங்கை என்று இருவ ரையும் கரையேற்றியிருக்கிறான். இன்னும் ஒரு தங்கை இருக்கிறாள். அவனின் அப்பாவும் இறந்துவிட்டார். இப்ராகீம் துபாய் செல்வதற்கு முன் தயங்கி தயங்கி வீட்டிற்கு வந்தான். அண்ணா, அண்ணி ஆபீஸ் சென்றி ருந்தனர். குழந்தைகள் பள்ளிக்குச் சென்றிருந்தனர். அம்மா மாவு மில்லுக்குச் சென்றிருந்தாள்.

"அம்மா, இல்ல... நா, துபாயிக்கு போறேன். அங்க எனக்கு வேலக் கிடைச்சிருக்கு. அம்மாகிட்ட சொல்லி வாடான்னு அம்மா அனுப்பிச்சாங்க. நா வந்தது ரொம்ப நல்லதாப் போச்சு. உன்கிட்ட சில விஷயம் பேசணும்."

சீதாவின் பார்வையைத் தவிர்த்து தரையைப் பார்த்த படி பேசினான்.

"என்னால, உன் படிப்பு, வாழ்க்கை எல்லாம் நாசமா யிடுச்சேன்னு ஒவ்வொரு வினாடியும் வேதனைப்ப டுறேன். எக்காரணத்தைக் கொண்டும் நீ தற்கொலை பண்ணிக்காதே, அதைக் கேள்விப்பட்ட அடுத்த நிமி ஷமே நானும் தற்கொலை செய்துக்குவேன். என்னைய நம்பித்தான் எங்க குடும்பமே இருக்கு. இடையில் நீ ஏதும் செய்துடாதே. சத்தியம் செய்"

- குரல் தழுதழுக்கக் கெஞ்சினான்.

அவன் விருப்பப்படியே சத்தியம் செய்து கொடுத்தாள். சிறிது சந்தோசத்துடன் அவளின் கையை அழுத்தி பிடித்தபடி 'தாங்க்ஸ்' என்று சொல்லி வேகமாக வெளியேறினான்.

அம்மாவின் இறுதிச் சடங்கு வேகமாக முடிந்தது. அமைதியாக அமர்ந்திருந்த சீதா அம்மாவை தூக்கும் போது 'அய்யோ' என்று அலறியபடி வெளியே ஓட முயன்றாள். இப்ராகீம் தாய் அவளை இழுத்து வந்து உட்கார வைத்து ஆறுதல் சொன்னாள்.

அன்றிரவே சீதாவை யார் வீட்டில் வைத்துக்

கொள்வது என்ற சண்டையும் நடந்தது.

அக்கா இருவரும் தாங்கள் பெண்கள் என்று விலகிக் கொண்டனர். அண்ணன்கள் கடுமையாக விவாதம் பண்ணினார்கள். சம்பளமில்லாத வேலைக்காரியை வைத்துக் கொள்ள ரொம்பவும் பிகு பண்ணினார்கள். சீதாவின் பழைய வாழ்க்கையை மிகவும் கேவலப்படுத்தினார்கள். இது கடவுள் அவளுக்கு கொடுத்த தண்டனை என்று விமர்சித்தனர். பொறுப்பாக ஏற்றுக் கொள்ள யாரும் முன் வரவில்லை.

"இது நாள் வரை என்னுடன் இருந்தாள், இனியாவது நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள்."

"என் வீட்டுல ஏற்கனவே வேலைக்காரி இருக்கா?"

- இது மூத்த அண்ணன்

"இவளுக்கும், எனக்கும் ஏற்கனவே ஆகாது"

- இரண்டாம் அண்ணி

"இவ என்னைய மதிக்கிறதேயில்லை, நா எப்படி சோறு போடுவேன்."

- இப்படி கடுமையான விஷ அம்புகள் அவளின் இதயத்தை பதம் பார்த்தன.

வந்திருந்த சொந்தங்கள் வேடிக்கைப் பார்த்தன. ஆணாகயிருந்தால் விலை பேசிவிடுவார்கள் தன் வீட்டு பெண்களுக்கு. பெண்ணாகயிருப்பதால் தங்களின் பழிகளைத் தீர்த்துக் கொண்டனர்.

"என்னய்யா உளர்றே? குடிசைகள் எரிந்துக்கிட்டிருக்கு. அதையெல்லாம் அணைக்க வேண்டாம்னு சொல்றே?"

"எங்க தலைவர் எரிகிறதைப் பார்வையிட வருகிறார். அணைச்சிட்டால் எப்படிப் பார்ப்பாராம்?"

— எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி



என்ன வச்சு காப்பாத்த வேணாம் கொஞ்சம் பேசாமல் இருங்களேன் என்று கத்த வேண்டும் போலிருந்தது. அடக்கிக் கொண்டாள்.

சிலர் பரிதாபமாகவும், சிலர் அருவருப்புடனும், சிலர் ஏளனமாகவும் பார்த்தனர்.

பாதுகாப்பற்ற நிலையை எண்ணி கலங்கி கலங்கி கண்கள் வலித்தன. எழுந்து பின்புறம் சென்றவள் தொட்டியில் இருந்த நீரை வாரி இறைத்துக் கொண்டாள் முகத்தில். நிலவொளியில் தான் என்ன முடிவெடுப்பது என்று குழம்பினாள். வாழ்வா? சாவா? யோசிக்க யோசிக்க தன் வாழ்க்கை வறட்டு கௌரவத்திற்காகவும் குடும்ப மானம் என்ற தலைமுறை சுமையால் சீரழிக்கப் பட்டு விட்டதையும் உணர்ந்தாள். யாருமற்ற அனாதையாக நடுவீதியில் நிற்பதைப் போல் வீட்டிற்குள் நிற்பதை உணர்ந்துத் தவித்தாள். பெண்ணாக பிறந்ததா? அனாதை விடுதிக்கு செல்வதா? கடவுளே, யாரையும் நம்ப முடியவில்லையே. மிகவும் குழப்பமாகயிருக்கிறதே!

ஒரு பெண் வந்து எட்டிப் பார்த்து விட்டு சொன்னாள். "உன்ன எங்கெல்லாம் தேடுறாங்க, நீ ஏன் இப்படியெல்லாம் குடும்பத்தை வேதனைப்படுத்துறே."

பின்னாடியே வந்த அண்ணி கடுமையான குரலில்

"கிணத்துல, குதிச்சிறாதே ஏற்கனவே மானம் பறந்துருச்சு, இன்னும் கேவலப்படுத்தாதே உள்ள வாடீ. முழிக்கிறதப் பாரு"

உள்ளே வந்தவள் ஒரு ஓரத்தில் படுத்துகொண்டாள்.

விமர்சனங்கள் தொடர்ந்தன.

"எனக்கு தெரிஞ்ச ரைஸ் மில்ல சேர்த்து விடுறேன் அத வச்சு அது பொழச்சுக்கிடட்டும்."

- தூரத்து சொந்தக்காரரின் ஆணவக் குரல்.

"ஆ, இது வேலைக்கு போயிடுச்சுன்னா, இவளுக்கும் சேர்த்தும் நா, சமைக்க முடியாது."

- பழைய புடவை கொடுத்துதவும் அண்ணியின் ஆக்ரோஷக்குரல்.

"அப்ப நீயே வச்சுக்கோ, இவ போயிட்டானா நீ எப்ப

டியும் ஒரு வேலைக்காரி போட்டாகணும்ல"

"வீட்டுக்குள்ள, இத வச்சுக்கிட்டு சந்தோசமாயிருக்க முடியலை"

வெகுநேரம் எல்லோரும் அமைதி காத்தனர்.

"நா, ஒரு இடம் சொல்றேன், முடிச்சிடு"

பெரியவரின் குரலுக்கு பணிந்தார்கள்.

"என்ன, சொல்லுங்க?

"அவருக்கு ஐம்பது வயது. இரண்டு பொண்ணுங்களை கட்டி குடுத்துட்டாரு. ஒரே ஒரு பையன் தானிருக்கான். அவரக் கவனிச்சுக்கிற மாதிரி ஒரு பொண்ணுத் தேடுறாரு. பொண்ணு வீட்டுக்கு இருபது முதல் முப்பதாயிரம் வரை பணம் தருவாரு. நல்ல வசதியான இடம்"

"முடிச்சிடலாமே இதுக்கே கழுதை வயசாச்சு"

"நல்லா, யோசிச்சுச் சொல்லுங்கோ அவருக்கு உப்பு சத்து, சுகர், வலது கால் லேஸா சாய்ச்சு நடப்பாரு"

"பரவாயில்லை, முடிச்சிடலாம்"

சாவு வீடு திடீர்னு கல்யாணக்களை கட்டியது. கல்யாணத்தை பத்தி ஒரு திட்டமே போட்டார்கள். அவருகிட்ட பணத்தை வாங்கி இதுக்கு கொஞ்சம் நகை போட்டு அதுலேயே கல்யாணச் செலவை அடக்கம் பண்ணிடலாமென்று கணக்குப் போட்டு முடித்தனர்.

சீதாவின் தூங்கிக் கொண்டிருந்த மனம் விழித்தது. ஆக்ரோஷத்தோடு எழுந்து வாசலை நோக்கி நடந்தாள்.

"எங்க, போற இந்த நேரத்துல"

"உங்களுக்கெல்லாம் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. மனிதர்களிடம் மட்டும்தான் பேசணும்னு முடிவெடுத்திருக்கேன். என் வாழ்க்கையை அநியாயமா நாசம் பண்ணின நீங்க அத்தனைப் பேரும் நல்லா வாழ்ந்துட மாட்டீங்க, என் பாவம் உங்களை எரிக்காமல் விடாது."

- சீதா விடுவிடுவென்று வெளியேறினாள். கண்ணகிபோல் தோற்றமளித்த அவளை யாரும் தடுக்கவில்லை. தங்களின் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்தவர்கள் அவளிடம் நெருங்கவில்லை.

கண்ணீர் இரவுகள் அவளுக்கு ஒன்றும் புதிதல்ல. ஆனால், இந்த பயங்கரமான இரவு அவளுக்கு புதிது. ●

பல்சுவை நாவல் வாசகர் பேரவைக்கு தேர்வு பெற்ற நபர் பட்டியல் கீழே பிரசுரிக்கப் படுகிறது. பட்டியல் தொடர்ந்து வெளியிடப்படும். மேலும், வாசகர் பேரவைக்கு புதிய உறுப்பினர்கள் வரவேற்கப்படு கிறார்கள். இந்தப் பேரவையில் இணைய விரும்பும் வாசகர்களுக்கு தனியே கூப்பன்கள் பிரசுரிக்கப்பட் டுள்ளது. தங்களுடைய சிறு அறிமுகப்படலத்தோடு [illegible] மற்றும் முழுவிலாசத்தையும் தபால் கார்டில் எழுதி, கூப்பனையும் ஒட்டி அனுப்பினால் பேரவையில் உறுப்பினராகலாம்.

# வாசகர் பேரவை

1928. ப.பாலமுருகன் பி.இ.,
கோவில்பட்டி - 628 501.

1929. எ.சக்திவேல்,
செய்யூர்.

1930. ப.அக்பர்ஆலம் பி.எஸ்.ஸி.
திருப்பத்தூர் - 635 601.

1931. ஏ.கே.பானு
பெங்களூர் - 560 011.

1932. ஏ.மைதீன்பாட்ஷா பி.காம்.
கோவை - 641 601.

1933. இ.ஜெஸிந்த்
நெல்லை - 627 657.

1934. ப.பாபு ஐ.டி.ஐ.
சென்னை - 44.

1935. க.ச.முருகேசன் பி.ஏ.,
திருத்தணி - 631 209.

1936. எஸ்.கல்யாணசுந்தரம்
டி.இ.சி.இ.,
சங்கரன் கோவில் 627 756.

1937. தமிழரசன்
பாகலூர் - 635 103.

1938. பி.ராஜசேகரன் பி.பி.எம்.,
மாமண்டூர் - 603 111.

1939. ஆர்.முரளிபாஸ்கர் பி.காம்.
குளித்தலை - 639 104.

1940. ஆ.மாணிக்கம் பி.ஏ.,
தருமபுரி - 635 202.

1941. கு.கிருபாகரன்
டி.எம்.இ.டி.பி.எம்.
சென்னை - 29.

1942. அழகு. அருணாசலம்
டி.எம்.இ.,
காரைக்குடி - 630 001.

1943. வீ.சக்திவேல்
கோம்பை,
உத்தமபாளையம - 625 522.

1944. பொன்.தாமோதரன் டி.லிட்.,
பரன்குன்றாபுரம் - 627 859.

1945. வை.முத்துக்குமாரசாமி
திருத்துறைப்பூண்டி
- 614 706.

1946. ஏ.முகமது ஹனிபா
கும்பகோணம் - 612 001.

1947. எம்.ரவிக்குமார் பி.ஏ.,
தேவதானம் - 626 145.

1948. கே.வடிவேலு,
சென்னை - 11.

1949. த.இரமேஷ் டி.அக்ரி.,
டி.சி.இ.,
திண்டுக்கல் - 624 306.

1950. சி.சிவக்குமார்
சென்னை - 53.

1951 ப.செல்வக்குமார் பி.எஸ்.சி.
டி.கோப்.டி.சி.சி.எஸ்.
கோவை - 29.

1952. வி.பச்சையப்பன்
கே.புதூர்,
மதுரை - 7.

1953. லாவண்யன் (பாலன்)
கோவை - 641 664.

1954. பி.கல்யாணகுமார்
டி.இ.சி.இ.,
சென்னை - 1.

1955. வி.கே.சி.கட்டிமுத்து
பி.பி.ஏ., எம்.ஏ.,
சிவகாசி - 626 123.

1956. இரா.சீனிவாசன் பி.இ.,
விழுப்புரம் - 604 151.

1957. ஏ.பார்த்திபன்
டி.எம்.எம்.எப்.டெக்.,
நாமக்கல் - 636 202.

1958 க. அம்சப்பிரியா
பில்சின்னாம் பாளையம்
சமத்தூர்-642 123.

1959 அ. சரவணன்
கள்ளக்குறிச்சி-606 202.

1960 கே. மாணிக்கம்
செங்கோட்டை-627 809.

1961 சி. இராஜமாணிக்கம் ஐ.டி.க
மேட்டூர்-636 501.

1962 டி. சந்திரசேகரன்
சென்னை-600 073.

1963. த. பூபாலன்
திருச்செங்கோடு-637322.

1964 அ. பூபதி
பெருந்துறை-638 052.

1965 அ. காசி விஸ்வநாதன்
பாளையாபேட்டை
திருநெல்வேலி-627 008.

1966 கே.பி. சின்னையா
பூனா-411 030.

1967 கே.ஜே. கௌரி சங்கர்
சென்னை-600 092.

1968 டி. செல்வம். பி.ஏ., பி.எ
மணக்கரை.

1969 செல்வ கணேஷ், பி.ஏ.,
சாந்தி நகர்-627 002.

1970 வை. சுப்ரமணியன்.
பி.ஏ.டி.இ.சி.இ.,
ஆத்தூர்-636 109.

1971 ச. மணிமுத்து
பா.பா.புதூர்
கோவை-641 041.

1972 க.ஜலாதரன்
சிங்காநல்லூர்
கோயம்புத்தூர்-641 005.

1973 அ.பி. சரவணன், டி.இ.
திருப்பூர்-647 607.

1974. என். சுரேஷ் ஆனந்தன்
சென்னை-600 044.

1975 என். கைத்தமலை,
ஊத்துகுளி-638 752.

1976 செ. சிவசண்முகம்
கோவை-641 302.

1977 ஜி. மணிகண்டன்
சிதம்பரம்.

1978 எம். இரவி
அரவக்குறிச்சி-639 201.

1979 ஆர். ராஜா
களிமேடு
காங்கேயம்-638 701.

1980 அ. பன்னீர் செல்வம்
செய்யார்-604 407

1981 ஜெ. காந்திமதி
சென்னை-600 013.

1982 கா. ராஜபாண்டியன்
திருவள்ளூர்-602 001.

1983 ஞா. தாவீதுராஜா
பொன்னேரி-601 205.

1984 எம். சக்திவேல்
சென்னை-600 113

1985 வி. சசிக்குமார். பி.காம்.
மல்லிங்கபுரம்
தேனி.

1986 வி. உதயம்
அதிராம்பட்டினம்-614 701

1987 என். கணேஷ் குமார்
கவுண்டம் பாளையம்.
கோவை-641 030.

1988 வே. ஜோதி மணிகண்டன்
புளியங்குடி-627 855.

1989 வி. கணபதி
நெடுங்குணம்-606 807.

1990 ஆர். அன்பு
முத்துகாபட்டி
நாமக்கல்-637 405.

1991 எஸ். ரஜினி ஷங்கர்
திருமானூர் -621 715.

1992 டி.ஆர். சந்திரசேகரன்
சென்னை-600 064.

1993 கோ. செந்தில் நாயகம்
களக்காடு-627 501.

1994 இளம் வழுதி
அத்திப்புலியூர்
நாகை-611 105.

1995 சிவக்குமார்
பனுவூர்-621 216

1996 எஸ். ஜெகதீஸ்வரன்
சேலம்-636 005.

1997 கே. வேல்முருகன்
இளவரங்குடி
உடையார்பாளையம்-621 803.

1998 பி. செந்தில் நாதன்
குட்டையக்காடு
மேட்டாம்பாளையம்-638 710

1999 ப. முருகேசன்
இரங்காட்டுபாளையம்
புஞ்சை புளியம்பட்டி

2000 ஜெ. புதுயுகம்
பண்ணந்தூர்
தருமபுரி-638 314.

2001 கே. கோஹிலா
கணக்கம்பாளையம்
கள்ளிப்பட்டி-638 505.

2002 கே.பி. சின்னையா
காரபட்டு
புதுக்கோட்டை-622 515

2003 சி. காந்தி நேரு
அரிதாரி மங்கலம்
காஞ்சி-606 702.

2004 இ. அந்தோணி ராஜ்.
சென்னை-600 041.

2005 ஆர். சுரேஷ்
திருநீலகண்டபுரம்
திருப்பூர்-638 607.

2006 எம். ஞானசேகரன்
இரத்தினகிரி-632 517

2007 எஸ். கேசவன்
பா.நா. பாளையம்
கோயம்முத்தூர்-641 037

—தொடரும்

# 1

கதிரவனின் முதல் ஒளிக்கற்றை கிழக்கு வானத்தைத் தொட்டபோது, சேர தேசத்திலிருந்து வரும் மேற்கத்திக் காற்று, காஞ்சி மாநகருக்குள் வேகமாய் புகுந்தது. உயர்ந்த மரங்கள் பெரிதாய் ஆடின. அயர்ந்து படுத்திருந்த கறவைகள் எழுந்து நின்றன. அசையாது நின்ற குதிரைகள் கால் மாற்றித் தவித்தன.

பறவைகள் பெரும் சப்தத்தோடு மரம் விட்டுக் கிளம்பி, 'யாரது, எங்கே, என்னவாயிற்று, நிறுத்து நிறுத்து' என்பது போன்ற ஒலிகளை எழுப்பி, அது காற்று என்று தெரிந்து மறுபடியும் மரக்கிளையில் அமர்ந்தன.

குயில் ஒன்று அலகு நுனியில் குளுமையை உணர்ந்து, மரத்தின் உச்சாணிக் கிளைக்குப் போய், மெல்ல கூவத் தொடங்கியது.

தூங்குகின்ற சிறு பையனை, தாயார் இதமாக எழுப்புவது போல், தன் கூவுதலால் பிரியத்துடன் எழுப்பிக் கொண்டிருந்தது.

நேற்று மாலையே பார்த்து வைத்திருந்த பசும்புற்களை ஆநிரைகள் முகர்ந்து பார்த்து, பசியோடு உண்ணத் துவங்கின.

கறவைகள் பசி தாங்காதவை. ஆர்வம் மிக்க மாணவன் வேதம் கேட்பது போல, அவைகளின் உணவு உண்ணுதல் இருந்தது.

குயில்கள் எழுப்பியதால், மைனாக்களும், பச்சைக்கிளிகளும் விழித்திருந்தன.

வெளிச்சம் சற்று அதிகமாயிற்று. இலைகளின் முன்புறத்திற்கும், பின்புறத்திற்கும் வித்தியாசம் தெரிந்தது. ஒரு பன்னீர் மரம் நிறைய, சிட்டுக்குருவிகள் இடம் மாறி அமர்ந்து பேசத் துவங்கின.

ஒரு கடிகையிலுள்ள மாணவர்கள் இரண்டு குழுக்களாகப் பிரிந்து, கடவுள் உண்டா, இல்லையா என்று ஒரே முற்றத்தில் வாதம் செய்வது போல, அந்த குருவிகள் சப்தம் செய்தன.

ஆனால், கிளிகள் வேறு விதம்.

'அடேய், விடிந்து விட்டதா பார்.

நீயும்தான் பார்க்கிறாயே இன்னும் விடியவில்லை.

விடிந்துவிடும், அப்பா பேசாதீர்கள்.

விடியாமல் போனால்தான் என்ன. விடிவதும் விடியாததும் நம் கையிலா இருக்கிறது.

பேசாதே. விடியும் வரை காத்திரு.

பேசாதே பேசாதே என்றே பேசிக்கொண்டிருங்கள்.'

மாற்றி மாற்றி கிளிகள் ஒன்றையொன்று அதட்டிக் கொண்டிருந்தன.

கொக்கு இனத்தைச் சேர்ந்த நொள்ளை மடையான்கள் கழுத்தை நீட்டிப் பார்த்துவிட்டு குலுக்கிக் கொண்டன.

'சூரிய தேவன் வருகிறார் பராக்' என்பதுபோல் ஒற்றை சப்தம் எழுப்பின. உடம்பிலூறும் பூச்சிகளை விரட்ட, 'படபட'வென்று சிறகுகளை அடித்துக் கொண்டன.

அது கோவிலில் சிறு முரசு கொட்டுவது போல ஒலித்தது.

ஆந்தைகள் அந்த இருட்டில் ஒருமுறை பறந்துவிட்டு, தன் பொந்துகளில் போய் உட்கார்ந்து கொண்டன. இமைக்காத விழிகளுடன் திராவிடதேசத்து அந்தணர் போல பழுப்பு நிறத்துடன், 'ஸோஹம்' என்று கத்தின. அது மிகப்பெரிய அத்வைத வார்த்தை. 'நானே அது என்கிற அர்த்தம் கொடுக்கும் வார்த்தை. நானே அது; அதுவே நான். நானே அது; அதுவே நான். நானே அது; அதுவே நான். என்று வெவ்வேறு திக்கிலிருந்து ஆந்தைகள் மாறி மாறிக் கூவின.

வடக்கே வெகு தொலைவிலிருந்து வரும் ஒரு வாளை மீனை முழுதாய் விழுங்கும் வாய் அகன்ற பறவை, துணிந்து பிரமாண்டமாய் எழுந்து வானத்தில் வட்டமடித்துவிட்டு, புல் மலிந்த சேற்றில் இறங்கியது. அலகால் உழுது, இரைதேடியது.

அந்த நீர்ப்பறவையைத் தொடர்ந்து, வலியன்கள் பறக்க ஆரம்பித்தன. தரையில் மோதுவது போல் இறங்கி, சட்டென்று எழும்பி சாகசங்கள் செய்தன.

இன்னும் வெளிச்சம் அதிகமாயிற்று. காற்று இன்னும் வேகமாயிற்று. தொலைவே பெய்யும் மழையால் காற்றில் இன்னும் குளுமை ஏறியிருந்தது.

அந்தக் குளுமை ஒரு குடிசையின் வாசலில் படுத்திருந்த மூன்று இளைஞர்களையும் உலுக்கி எழுப்பியது. அந்தக் குளிருக்கு அவர்கள் மேலாடை போதவில்லை. எனவே, அவர்கள் உதறி எழுந்திருக்க வேண்டியதாயிற்று.

வெப்பம் அதிகமிருந்தாலும் தூங்க முடியாது. குளிர் அதிகமிருந்தாலும் உறங்க முடியாது. இன்னும் ஒரு நாழிகை தூங்க வேண்டிய அலுப்பு உடம்பில் இருந்தாலும், அந்த

இளைஞர்கள் எழுந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

சதாசிவ நம்பி என்கிற அந்தண இளைஞன் தன் கைகளை பரபரவென்று தேய்த்து, ரேகைகளை உற்றுப் பார்த்து, ஓம் என்று குரல் கொடுத்து, அந்த ஒலியை உள்ளங்கையில் வாங்கி, உள்ளங்கையில் முகத்தைத் துடைத்துக் கொண்டான். வானம் பார்த்து, தலைக்கு மேல் கைகூப்பி, ஆழ்ந்த நீலத்தை வணங்கினான்.

எதிர்பக்க திண்ணையில் படுத்திருந்த குணசேகரன் கண் மூடி நகர்ந்து திண்ணையை விட்டு இறங்கி நின்றான். அவன் வணிக குலத்தவன். குனிந்து பூமியைத்தொட்டு மண் எடுத்து நெற்றியில் இட்டுக்கொண்டான். 'நமசிவாயம்' நமசிவாயம்' என்று உரத்து கூவினான். குதிரையின் முகத்தில் விழித்தான்.

இந்த சப்தம் கேட்டு, கந்தசேனன் மனம் விழித்துக் கொண்டது. மனம் விழித்தாலும் அவன் கண்களைத் திறக்கவில்லை. அவனுக்கு மட்டும் கட்டில் தரப்பட்டிருந்தது. அந்தக் கட்டிலில் அவனுக்கு அருகே நீண்ட உடைவாள் இருந்தது. உடைவாளைப் பற்றி, எழுந்து உட்கார்ந்தான். அவன் அரச குலத்தினன். உடைவாளை கண்களில் ஒற்றிக் கொண்டான்.

'மகா காளி, துர்கா தேவி, நமோ நமஹ' என்று சப்தமிட்டான்.

வெளிச்சம் இன்னும் அதிகமாயிற்று. அந்த இளைஞர்கள் ஒருவரையொருவர் பார்த்து சிரித்துக் கொண்டார்கள். தனித்தனியே பிரிந்து போனார்கள் புதர்கள் மறைவில் குத்திட்டு அமர்ந்தார்கள்.

வீட்டைச் சுற்றி கொல்லைப்புறம் போனார்கள் அங்கு கிணற்றுக்குப் பக்கத்திலிருந்த நீர் தொட்டியிலிருந்து நீரெடுத்து கால் கழுவினார்கள். ஒடித்து வைக்கப்பட்டிருந்த வேப்பங்குச்சிகளால் பல் துலக்கினார்கள்.

வீட்டின் பின் கதவு திறந்தது. கட்டுமஸ்தாய் ஒரு யாதவ இளைஞன் வெளியே வந்தான். அருகே போய் அரச குலத்து இளைஞனின் காலைத் தொட முயன்றான்.

கந்தசேனன் சட்டென்று முன்னேறி, அவனை அவ்விதம் செய்வதிலிருந்து தடுத்து நிறுத்தினான்.

''இரவு நன்கு தூங்கினீர்களா இளவரசே?''

''அற்புதமாகத் தூங்கினேன்.''

''ஏன் சீக்கிரம் எழுந்துவிட்டீர்கள்?''

''குளிர் காற்று எழுப்பிவிட்டது.''

''அதனால்தான் நேற்றிரவே நான் உங்களுககு போர்வை கொடுத்தேன் நீங்கள் வேண்டாமென்று மறுத்துவிட்டீர்கள்.''

''மறுத்தது நல்லதாய் போயிற்று. இல்லையெனில் விடிந்து பல நாழிகை போர்வைக்குள் சுருண்டு தூங்கி இருப்பேன். இப்போது பார். பல் தேய்த்துக் கொப்பளித்தவுடன் பயணப்பட்டுவிடலாம்.

''பயணப்படுவதா. உங்களுக்காக சோறு கொதித்துக் கொண்டிருக்கிறது. உங்களுக்காக என் மனைவி இரவெல்லாம் தூங்காமல் காய்கறிகள் திருத்தி, பருப்புகள் சுத்தம் செய்து, பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்கிறாள். நீங்கள் சட்டென்று விடைபெற்றால், நாங்களெல்லாம் வருத்தப்படுவோம்.''

''இது என்ன முட்டாள்தனம் கேசவா? படுத்து உறங்க திண்ணையில் இடம் கேட்டால், இப்படி விருந்து செய்து வழி மறிக்கிறாய். இன்று இரவுக்குள் நாங்கள் காஞ்சிக்கு போக வேண்டும்.''

''இன்னும் ஒரு நாழிகையில் உணவு தயாராகிவிடும். உண்டுவிட்டுப் போகலாம். ஐயனுக்குத்தான் என்ன தருவது என்று தெரியவில்லை. அரிசியும், பருப்பும், அரிந்த காய்கறிகளும், புதுப்பானையும், வலது பக்க இடைகளியில் தயாராக இருக்கின்றன. நீர் நிரப்பிய தாமிர பாத்திரம் வைத்திருக்கிறேன். ஐயன் சதாசிவ நம்பி சுயம்பாகம் செய்து கொள்ளலாம்

காராம் பசு தவிக்க ஆரம்பித்து விட்டது. பால் கறந்து, காய்ச்சி, பனங் கற்கண்டு போட்டுக் கொண்டு வருகிறேன். ஆளுக்கொரு சொம்பு குடித்துவிட்டு, ஏரிக்கரை வரை போய் வாருங்கள். கோயில் குளத்தில் நீராடி வாருங்கள். உணவு தயாராக இருக்கும்.

சதாசிவ ஐயனுக்கு சுயம்பாகம் முக்கியமில்லை என்றால், கோயில் குருக்கள் வீட்டில் பாகம் செய்து கொடுத்து விடுவார்கள்.''

''சதாசிவம் அப்படியொன்றும் ஆச்சாரம் பார்க்கிற வனல்ல. மச்ச, மாமிசம் இல்லாத உணவு எவர் போட்டாலும் சாப்பிடுகிறான். எனவே, உன் வீட்டுப் பக்குவத்தை அவன் மறுக்கப் போவதில்லை. என்ன சதாசிவா?''

''கேசவனைப் பார்த்தால் கோகுலத்தில் வாழ்ந்த பலராமனைப்போல் இருக்கிறான். பலராமர் உணவை நான்

எப்படி மறுக்க முடியும்? இவர்களுக்குப் போடும் உணவையே எனக்குப் போடு. ஒரு வேளை இவர்கள் மாமிசம் வேண்டுமென்றால்...''

''வேண்டாம். எங்களுக்கு மாமிசம் வேண்டாம்.'' அவர்கள் சதாசிவ ஐயனுக்காய் மறுக்க.

''அப்படியானால் ஒரு நாழிகையில் உணவு தயாராகிவிடும். தயவு செய்து பசும்பால் குடித்துவிட்டு ஏரிக்கரைக்குப் போகலாம்.''

பெரிய தவ்லை நிறைய் பால் கறந்து கொண்டு கேசவன் வீட்டிற்குள் ஓடினான்.

அழுத்தி, அழுத்தி, விரல் நீள வேப்பங்குச்சியை கடித்துக் கடித்து, சாறு விழுங்கி, ஈறு முழுவதும் தேய்த்த பிறகு, பசும்பால் மணம் கும்மென்று எழுந்தது.

கொல்லைப்புறத்து கிணற்று மேடையில் உட்கார்ந்தபடி பனங்கற்கண்டு போட்ட பசும்பால் குடித்தார்கள். குடியிருப்புகளைத் தாண்டி, கோவில் தாண்டி, வயல்வெளிகள் தாண்டி ஏரிக்கரைக்குப் போனார்கள்.

கந்தசேனன் சட்டென்று நின்றான்.

''அட, ஏன் காலையில் இப்படி குளிர்காற்று அடித்தது என்று இப்பொழுதுதான் தெரிந்தது. தென் மேற்கிலிருந்து வரும் காற்று இந்த இடத்தில் திசை மாறுவதைப் பாருங்கள். வடக்கு நோக்கி நகர வேண்டிய காற்று இந்த இரண்டு மலைகளுக்கு நடுவே வந்து, இந்த சிறிய குன்றால் தடுக்கப்பட்டு முழு வேகத்தில் ஊர் நோக்கித் திரும்பி விடப்படுகிறது.

காற்று திசைமாற்றி திரும்பிவிடப்பட்டபோது, அதன் வேகம் அதிகமாகின்றது. அதனால்தான் பல்லவபுரம் பிற்பகல் வரை குளுமையாக இருக்கிறது.''

''ஆமாம் கந்தசேனா.'' சதாசிவ நம்பியும் சுற்றிப் பார்த்தான்,

''அரணாக மூன்று மலைகள். சுற்றிலும் நீர் நிலைகள். நன்செயும், புன்செயும் கலந்த இடம். ஊர் மேடாக இருந்தாலும், நிலம் வளமாக இருக்கிறது. பல்லவபுரம் ஒரு அற்புதமான ஊர். இது பல்லவர்கள் கட்டிய ஊரா என்று தெரியவில்லை. ஆனால் சிம்ம விஷ்ணு காலத்திலேயே ஏற்பட்ட ஊர் என்று சொல்கிறார்கள்.''

''இந்த ஊர் பலமாகிவிட்டது. பெரிய படையெடுப்புகள் இல்லை. கொள்ளை நோய்கள் ஏதுமில்லை. சிம்மவிஷ்ணு

பல்லவரால் ஏற்பட்ட ஊர்தான். அதனால் தான் பல்லவபுரம் என்று பெயர் வந்திருக்கிறது. இந்த இடத்தில் ஊர் ஏற்படுத்தலாம் என்று சொன்னவன் அதிபுத்திசாலி. காற்று மலையில் மோதி, ஏரியைத்தாண்டி, ஊருக்குள் வருகிறது. அதனால்தான் பிற்பகல் வரை ஊர் 'குளுகுளு' என்றிருக்கிறது. கொத்துக்கொத்தாய் செண்பகம் பூக்கிறது. கொடி சம்பங்கி வளர்கிறது. குளுமை இல்லாவிட்டால், இந்தப் பூக்கள் வளராது.''

''இத்தனை வளமிருந்தும் காஞ்சீபுரம் போல் கூட்டம் இல்லையே ஏன்?''

''கடவுளே, எதற்கு இந்த ஊரில் கூட்டம் வேண்டும். கந்தசேனா இது இப்படியே இருந்துவிட்டு போகட்டும்.''

''இல்லை. அருகே மயிலையும், திருவல்லிக்கேணியும் இருப்பதால், இங்கெல்லாம் கூட்டம் வராது. மயிலை வணிகர் வசிக்கும் பகுதி. திருவல்லிக்கேணி அந்தணர் கோட்டை. இது வேளாளர்கள் இடம்.''

விடியல் நேரம் செண்பகப் பூக்கள் பறித்து, மல்லிகைக்களைக் குடலைகளில் ஏந்தி, கீரையும், முருங்கையையும் பறித்து க்கட்டாகக்கட்டி, மேலும் சில காய்கறிகளோடு வில்வண்டி எடுத்தால், உச்சி வேளைக்கு மயிலை போய் சேர்ந்துவிடலாம்.

மயிலாப்ரி தாசிகள் நிறைந்த இடம். வாசனைப் பூக்கள் நல்ல விலைக்குப் போய்விடும். கீரையும், முருங்கையும் வணிகர்கள் விரும்பி வாங்குவார்கள்.

மயிலையிலிருந்து ஆண்களுக்கும், பெண்களுக்கும் விதவிதமாய் புடவைகள் வாங்கலாம். சமையல் பாத்திரங்கள் வாங்கலாம். கடற்கரைப் பட்டினம் என்பதால் நல்ல ஜாதி யவன குதிரைகள் வாங்கலாம். கீழைச் சாளுக்கிய தேசத்திலிருந்து ஓட்டிவரப்பட்ட எருதுகள் வாங்கலாம்.

கேசவன் வீட்டுக் கொட்டிலில் பலதும் சாளுக்கிய பசுக்கள்தான். கவனித்தாயா?''

இளைஞர்கள் சளைக்காது பேசியபடி ஏரிக்கரை நோக்கிப் போனார்கள். சுற்றி எல்லா விஷயங்களையும் கூர்மையாக கவனித்தார்கள்.

மறுபடியும் புதர் மறைவில் அமர்ந்து வயிற்றை லேசாக்கிக் கொண்டார்கள். சூடான பசும்பாலும், பனங்கற்கண்டும் அதற்கு உதவி செய்தன. கை, கால் கழுவி, குளம் நோக்கி ஓடினார்கள். தொபீர் என்று விழுந்தார்கள். சுற்றி சுற்றி நீந்தினார்கள். முக்குளித்து அடியிலிருந்து

களிமண் எடுத்து வந்து முகத்துக்குப் பூசிக் கொண்டார்கள். களிமண் உலரும் வரை துணி துவைத்தார்கள். பிறகு மறுபடியும் குளித்தார்கள்.

கரையேறிய பின்னர் அருகிலிருக்கிற சிறு குன்றில் ஏறி, அந்த குன்றிலிருக்கிற கோயில் லிங்கத்தை வழிபட்டார்கள். திருநீறு எடுத்துக் கொண்டார்கள்.

''கந்தசேனா, இந்த இடத்தில் நிற்கும் போது உனக்கெதாவது தோன்றுகிறதா?'' சதாசிவ நம்பி கேட்டான்.

''நல்ல காற்று. நல்ல சூழல். தெளிந்த நீர். இந்த குன்றின் மீது ஒரு நல்ல மாளிகை கட்டி இந்த பல்லவபுரத்தையே என் தலை நகரமாகச் செய்ய வேண்டுமென்று ஆசையிருக்கிறது.

வடக்கே திருவொற்றியூர் வரை, தெற்கே வல்லம் வரை கிழக்கே கடற்கரை வரை மேற்கே திருநின்றவூர் வரை ஒரு எல்லை வகுத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசையிருக்கிறது. என்ன எல்லை வகுத்துக் கொண்டாலும், பல்லவருக்கு நான் கப்பம் செலுத்தித்தான் ஆக வேண்டும். வெறும் சிற்றரசனாகத்தான் இருக்க வேணடும்.''

''அதைவிடு குணசேகரா. உனக்கு என்ன தோன்றுகிறது?''

''இந்த மலை விலையாகும்.''

''என்ன?''

''இந்த மலை சிலையாகும்.''

''புரியவில்லையே.''

''இந்த மலையின் மேற்பகுதி சர்ளைக்கல். ஒரு விரட்கடை நோண்டினால், நல்ல கருநீலக்கல் இருக்கிறது. ஒரு நூறு கல் தச்சர்கள் வைத்து, சிறு சிறு சதுரங்களாக இந்த மலையை வெட்டி, உறுதியான பார வண்டிகளில் ஏற்றி, நீ சொன்ன அதே எல்லையில் விற்றுக் காசாக்கி விடுவேன். இந்தக் கற்கள் வீட்டு அஸ்திவாரத்திற்கும், கோவில் தூண்களுக்கும், கிணற்றுப் படிகளுக்கும், ஆற்றங்கரையில் பாவுவதற்கும் நிச்சயம் உபயோகமாகும்.

யாரேனும் சிற்றரசர் கோட்டை கட்ட ஆரம்பித்தால், இந்தக் குன்றை மூன்று மடங்கு விலைக்கு விற்றுவிடுவேன். ஐந்து வருடத்தில் பெரும் பணக்காரனாகி விடுவேன்.''

''பிறகு செத்துதானே போவாய்?''

''ஆமாம். எல்லோரும் செத்துதான் போகப் போகிறார்கள். அதுதானே உலகத்தின் சிறப்பு.''

''இல்லை. மனிதர்கள் சாகாதிருக்க வழி இருக்கிறது.'' சதாசிவ நம்பி கண்சிமிட்டியபடி கூறினான்.

''வேண்டாம். எதாவது பிராணாயாமம், மந்திர ஜபம் என்று பொய் சொல்லாதே.'' குணசேகரன் லேசாகச் சீறினான்.

''அவை பொய்களல்ல வணிகனே. அவைகளாலும் மரணத்தைத் தடுத்த நிறுத்த முடியாது. ஆனால் தள்ளிப்போட முடியும்.''

''பிறகு என்னதான் சொல்கிறாய் நீ?''

''இந்த இடத்தில் ஒரு கோவில் எழுப்பினால் என்ன? கந்தசேனா, இளவரசனாகிய நீ இப்போதே திட்டமிட்டால் என்ன. இந்தக் குன்றைக் குடைந்து சிவனுக்கும், விஷ்ணுவுக்கும், ஜேஷ்டா தேவிக்கும் அற்புதமான கோயில் கட்டலாமே. ஜேஷ்டா தேவி உன் குலதெய்வம் அல்லவா? சிவனும், விஷ்ணுவும் முழுமுதற் கடவுள்கள் அல்லவா? அப்படியொரு குகைக் கோயில் எழுப்பினால், பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் உன் பெயர் சொல்லப்படுமே, உனக்கு மரணமே இருக்காதே.

வயேந்திர பிரி அரசன் மகன் கந்தசேனன் செய்வித்த கோயில் என்று காலாகாலத்திற்கும் பேசப்படும். நாடு விரிவுபடுத்தி என்ன காணப்போகிறாய்? பல்லவர் ஆட்சியில் உள்ள ஒரு தமிழ் மன்னன் கோயில் கட்டினான் என்று பேசப்படுவாயே.''

''நன்றி நம்பி. நன்றி. இதற்காகத்தான் நான் உன்னோடு சிநேகமானேன். நீ யோசிக்கிற விதமே புதிதாக இருக்கிறது என்பதால்தான், உன்னை என்னோடு இழுத்துக் கொண்டு சுற்றுகிறேன். கோயில் கட்ட வேண்டும் நம்பி. பல்லவர்களைத் தாண்டி நாடு விஸ்தரிக்கவே முடியாது. அவர்களிடம் இந்த எல்லைகளை யாசித்துதான் பெற முடியும். அப்படி பிச்சையெடுப்பதற்கு மௌனமாக இருக்கலாம்.''

''ஏன் பிச்சையெடுக்க வேண்டுமென்று சொல்கிறாய் கந்தசேனா? கீழைச் சாளுக்கியரோடு ராஜ சிம்மன் ஒரு போர் துவங்கி, அந்தப் போரில் வெற்றி பெற நீ முழுவதும் உதவி செய்தாயென்றால், நீ கேட்ட நிலத்தை பல்லவ மன்னர் உனக்கு தானம் தர மாட்டாரா? நீ கேட்ட வல்லத்தை உனக்கு எழுதி வைக்க மாட்டாரா?

வடக்கே மயிலை, திருவல்லிக்கேணி உட்பட்ட எல்லைகளை உனக்கு சாசனம் செய்ய மாட்டாரா? மறுபடி

சொல்கிறேன். நீ அரசாளுவாய். கோயில் கட்டுவாய். உன் ஜாதகத்தில் அது இருக்கிறது.'' சதாசிவ நம்பி உரத்த குரலில் பேசினான்.

''நான் 'ஆயிரக்கணக்கான வருஷங்கள் பேசப்படுவேனா நம்பி?''

''நிச்சயம் பேசப்படுவாய். அதுவும் உன் ஜாதகத்தில் இருக்கிறது.''

''சரி, ஏன் போர் பற்றியே யோசிக்கிறீர்கள்?'' குணசேகரன் உள்ளே புகுந்தான்.

''பல்லவபுரத்திற்குப் போய் இந்த மலையை ஊர் சபையிடம் விலை பேசலாம். இதை உடைத்து, எடுத்துப்போக ஓலை எழுதிக்கொடுங்கள் என்று கேட்கலாம்.''

''விற்கமாட்டார்கள்.''

''ஏன்?''

''இது பல்லவ அரசருடையது. அவருக்குத்தான் விற்கும் உரிமை என்று சொல்லிவிடுவார்கள்.''

''உண்மை. அதற்கும் வாய்ப்பிருக்கிறது'' சதாசிவ நம்பி யோசித்தான்.

''இந்த ஊர் சபை அப்படி சொன்னால், இந்த ஊர் சபையிடம் எங்களுக்கு இந்த நிலத்தை சாசனம் செய்து தருவதில் எந்தவித ஆட்சேபணையுமில்லை என்று எழுதி வாங்கிக் கொள்வோம்.''

''பல்லவ அரசன் ராஜசிம்மன் எதற்கு என்று கேட்டால்?''

''கோயில் கட்ட என்று சொல்வோம்.''

''பல்லவ அரசன் ராஜ சிம்மனைப் பார்க்கவே முடியாது. ஏக கெடுபிடி.''

''அரசனை அரச சபையில் பார்ப்பது முதியோர்களுக்கு சாத்தியம். நாம் அரசனை களத்தில் சந்திக்க வேண்டும். போர் பயிற்சிக் களத்தில் அல்லது நெற்களத்தில் சந்திக்க வேண்டும்.''

''அங்கும் அந்தண அமைச்சர்கள் சூழத்தானே இருக்கிறார்.''

''ராஜ சிம்மன் பல்லக்கில் போவதில்லை. அந்தண அமைச்சர்கள் பல்லக்கில் போகிறார்கள். அரசர் குதிரையில் போகும் போது அருகே நமது குதிரையை செலுத்தி

ஒட்டிக்கொள்ள வேண்டியதுதான்.''

''முடியுமா?''

''முயன்றால் முடியும்.''

''நம்மை அரசர் மதிப்பாரா நம்பி?''

''இளைஞர்களை எல்லா அரசர்களும் மதிப்பார்கள். கிழட்டு அமைச்சர்கள் சீறுவார்கள். நாம் எந்த சந்தேகமும் கொள்ளாமல் பல்லவ அரசர் ராஜ சிம்மனை அணுகித்தான் ஆக வேண்டும்.''

''பல்லவ அரசர் ராஜ சிம்மன் அனுமதி கொடுத்துவிட்டால் என்ன செய்வதாக உத்தேசம் நம்பி?''

''அதை குணசேகரன் தான் சொல்ல வேண்டும்.'' நம்பி கைகாட்டினான்.

''நான் சொல்கிறேன் கந்தசேனா. இது சிறிய குன்று. இதை கோயில் கட்ட பயன்படுத்த வேண்டாம்.''

''என்ன கதையையே மாற்றுகிறாய்?''

''ஆமாம். இந்த குன்றில் இளவரசர் கந்தசேனன் கோயில் கட்டப் போவதில்லை. மாறாக நான் சொன்னபடி, நூறு கல்தச்சர்கள் வைத்து கற்பலகைகளாகவும், தூண்களாகவும் செதுக்கி, சிலைகளுக்கான செவ்வகங்களும் புரட்டி எல்லா திசைகளுக்கும் அனுப்புவோம். குறிப்பாய் காஞ்சிக்கு அனுப்புவோம்.

காஞ்சியில் கோயில்கள் பல இருந்தாலும் பணம் படைத்த பலர் தொடர்ந்து மண்டபங்களும், கோயில்களும் கட்டிக்கொண்டு தான் இருக்கிறார்கள். நூறு கல்தச்சர்கள். முப்பது பார வண்டி. நாம் இங்கே வீடு கட்டி அமர்ந்து, ஒரு வருடத்தில் மலையைக் கரைத்துவிடலாம்.

அந்தப் பொற்காசுகளை எடுத்து இன்னும் உயரமான இடத்தில் குகைகோயில் கட்டலாம். இந்தக் குன்றை கோயில் கட்ட தேர்ந்தெடுப்பது கூடாது. இன்றில்லை எனினும் என்றேனும் ஒரு நாள் இந்தக் குன்று தகர்க்கப்படும். இதைவிட உயரமான மலைதான் கோயிலுக்கு நல்லது.

அதுமட்டுமல்ல. இங்கு ஏற்கனவே பல்லவபுரம் இருக்கிறது. ஊர் இருக்கும் இடத்தில் கோயில் எதற்கு கட்டுவது?''

''இது என்ன கேள்வி குணசேகரா? ஊர் இல்லாத இடத்திலா கோயில் உண்டாக்குவார்கள்.''

''முதலில் கோயில் கட்டுங்கள். பிறகு அதனைச் சுற்றி

ஊர் உண்டாக்குங்கள். அந்த ஊருக்கு கந்தபுரம் என்று பெயரிடுங்கள். கோயில் மட்டுமல்ல, ஊரும் ஆயிரக்கணக்கான வருஷங்களாய் உன் பெயர் சொல்லிக் கொண்டே இருக்கும்.''

''கடவுளே, எவ்வளவு அருமையான நண்பர்கள் நீங்கள். என்னை உருவாக்க எத்தனை பாடுபடுகிறீர்கள். உன் யோசனைக்கு மிக்க நன்றி குணசேகரா.''

''இளவரசே, குணசேகரன் எங்கேயோ போய்விட்டான். அவன் வணிக மூளை எல்லையற்றது.'' நம்பி பாராட்டிப் பேசினான்.

''எல்லாம் நம்பியின் ஆசீர்வாதம். அவன் சொல்லிக் கொடுத்த நமசிவாய ஜபம். அதனால்தான் என் புத்தி விருத்தியாயிற்று.''

''சரி, மறுபடியும் சரியாகத் திட்டமிடுங்கள். இப்போது என்ன செய்யப் போகிறோம். இந்தக் குன்றை விலைக்கு கேட்கப் போகிறோம். தருகிறேன் என்று சொன்னால், வல்லத்திற்குப் போய் என் தகப்பனாரிடம் இருந்து பொன் வாங்கி, கல் தச்சர்களை அழைத்து வந்து; உடைக்கத் துவங்க வேண்டும்.''

''நூறு கல்தச்சர்கள் கிடைப்பார்களா?''

''கிடைப்பார்கள். முப்பது பார வண்டிகள் கிடைப்பதுதான் சிரமம். சில பார வண்டிகளை நாமே உருவாக்க வேண்டும். நல்ல காளைகளும், பலமான ஆட்களும் தேவைப்படும்.''

''என் தந்தை ஆயிரம் பொன் தருவார்.''-இளவரசன் சொன்னான்.

''இது மேலே இருக்கிற மண் வாரக்கூட போதாது. உடனடியாக லட்சம் பொன் தேவை. நான் ஐம்பதாயிரம் பொன் எடுத்து வருகிறேன்.''

''எனக்கு அவ்வளவு வசதி இல்லை. ஆனால் நிர்வாகம் மொத்தமும் நான் பார்த்துக் கொள்கிறேன். நல்ல கணக்கர்களைக் கொண்டு வருகிறேன்.''

''நம்பி, அதோ பார் யாரோ வருகிறார்கள்.'' பேசிக் கொண்டிருந்த நம்பியை இளவரசன் இடை மறித்தான்.

குன்றை நோக்கி வரும் ஒற்றையடிப் பாதையில் உறுதியான தடி ஊன்றி, சாய வேட்டி கட்டி, இடுப்பில் துண்டு கட்டி, தலைப்பாகை அணிந்து, வலக்கையில் ஒற்றைக் கங்கணமும், காதுகளில் வளையமுமாய்

செருப்பில்லாத் கால்களோடு, உறுதியான உடற்கட்டோடு ஒரு நடுத்தர வயது ஆள் நடந்து வந்து கொண்டிருந்தார்

''நம்பி, பல்லவபுரத்து ஊர் சபைத் தலைவராக இருக்குமோ?''

''இருக்கும்.''

''எதற்கு நம்மை நோக்கி வருகிறார்?''

''நாம் இருப்பது தெரிந்து வருவதாகத் தெரியவில்லை.''

''பிறகு?''

''ஏதோ மேற்பார்வை இட வருகிறார். என்று நினைக்கிறேன்.''

''ஒதுங்க வருகிறாரோ?''

''இங்கு நீர்நிலை இல்லையே'' நம்பி யோசித்தான்.

''வெறுமே காலையில் உலா வருதல் போலிருக்கிறது அவர் நடை. கந்தசேனா, சட்டென்று பாறையில் அமர்ந்து கொள்'' நம்பி அவசரப் படுத்தினான்.

''எதற்கு?''

''நீ ஒரு இளவரசன். கம்பீரமாக அமர்ந்து கொள்.''

''எதற்கு என்று சொல் நம்பி?''

''அந்த ஊர் தலைவரிடம் இவர் இளவரசர் கந்தசேனன். மாமன்னர் ராஜ சிம்மனின் குதிரைப்படை சேனாதிபதி. இந்தக் குன்றை விலைக்கு வாங்க வந்திருக்கிறார். இந்தக் குன்று என்ன விலை? நான் சதாசிவ நம்பி. மாமன்னரின் ஒற்றர்படையின் முக்கிய தலைவர். அவர் குணசேகரன் பல்லவ மன்னர் ராஜசிம்மனின் அவைக்கள வணிகர் என்று அறிமுகப்புடுத்திக் கொள்ளலாம்.''

''அடேய் நம்பி. நாம் இளைஞர்கள். அந்த ஊர் சபைத் தலைவர் நம்புவாரா?''

''நம்ப வைப்போம். கீழைச் சாளுக்கிய படையெடுப்புக்குப் பிறகு மன்னர் இளைஞர்களைத்தான் அருகே வைத்துக் கொள்கிறார். உன்னைப் போன்ற முதியவர்களைக் கண்டால் அவருக்குப் பிடிப்பதே இல்லை என்று சொல்வோம்.''

அவர்கள் வாய்விட்டு சிரித்துக் கொண்டார்கள்.

''நாம் இருவரும் பணிவாகப் பேசுவோம். அந்த ஊர் சபைத்தலைவரை இளவரசரை வணங்கு என்று கட்டளையிடுவோம்.''

''வணங்க மறுத்தால்?'' குணசேகரன் கேட்டான்.

''சற்று வன்முறை காட்டுவோம்.'' நம்பி உறுதியாகச் சொன்னான்.

இளவரசன் கந்தசேனன் கம்பீரமாக அமர்ந்தான்.

''போதாது இன்னும் கம்பீரமாக இரு.''

கந்தசேனன் முயற்சித்தான்.

''முகத்தை அலட்சியமாக வைத்திரு.''

இளவரசன் முகத்தை கோணலாக்கினான்.

''வேண்டாம். இப்போது குட்டி ஈன்ற குரங்கு போல இருக்கிறாய். சாதாரணமாகவே இரு.''

நம்பி கூற, கந்தசேனன் அவனை முறைத்துவிட்டு சாதாரணமாக இருந்தான்.

குன்றிலேறி பாறையைக் கடந்து, அந்த நடுத்தர வயது ஆள் அவர்கள் முன்னே தோன்ற.

''யாரங்கே, அங்கேயே நில்.'' நம்பி அதட்டினான்.

அந்த ஆள் நின்றார். ஆச்சரியமாகப் பார்த்தார்.

''நீர் யார்?''

அந்த மனிதன் பதில் சொல்லவில்லை.

''நீங்கள் யார்?'' நிதானமாகக் கேட்டார்.

''இவர் வல்லத்து இளவரசர் கந்தசேனன். மாமன்னர் ராஜசிம்மனின் குதிரைப்படையின் முதல் சேனாதிபதி. நான் மாமன்னர் ராஜசிம்மனின் ஒற்றர் படையின் முக்கிய தலைவர். அவர் அவைக்கள வணிகர். மிகப் பெரிய செல்வந்தர். ராஜசிம்மனின் பண்டாரமே இவர் கையில்தான் இருக்கிறது.''

''அப்படியா எல்லோருக்கும் வணக்கம்.'' வந்தவர் கை கூப்பினார்.

''என்ன வெறும் வணக்கம் சொல்கிறீர்கள். ஒரு இளவரசரை ஊர் சபைத் தலைவர் வணங்கும் முறையா இது?'' கால் தொட்டு வணங்குவது தானே முறை.''

''உண்மை தான்.'' வந்தவர் பணிவாகப் பேசினார்.

''நான் சிவ தீட்க்ஷையில் இருக்கிறேன்.'' அடர்ந்து வளர்ந்த தாடியைத் தடவியபடி சொன்னார்.

''சிவனுக்காக நேர்ந்திருக்கிறேன். புலால் உண்ணாமையும், புணராமையும், கடுஞ்சொல் இல்லாமையும் கொண்டு விரதம் பூண்டு, கங்கணம் கட்டியிருக்கிறேன். கங்கணதாரி

